# கண்ணகி கதை

[வில்லுப்பாட்டு]



ஆசிரியர் :

திருக்குறள் மணி, வித்துவான்,

திரு அ க நவநீதகிருட்டிணன்



திருநெல்வேலி, தென்னிந்திய

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிமிடெட்,

1/140, பிரகாசம் சாலை, சென்னை-1.

1975

கிளைகள் :

திருநெல்வேலி-6 மதுரை-1 கோயமுத்தூர்-1
கும்பகோணம் திருச்சிராப்பள்ளி-2

கழக வெளியீடு : ௯௭௧

முதற்பதிப்பு : பிப்ரவரி 1953;
மறுபதிப்புகள் : நவம்பர் 1956;
அக்டோபர் 1975

KANNAGI KATHAI

[VILLUPPAATTU]

அப்பர் அச்சகம், சென்னை-600 001. (I/1)

# பதிப்புரை

வில்லுப்பாட்டு தமிழகச் சிற்றூர்களில் இந் நாளிலும் பாராட்டப்பெறும் நல்லிசையாகும். பல்வகைக் கதைகள் வில்லுப்பாட்டாகப் பாடப்பெற்று வருகின்றன. பெரும் பாலும் வில்லிசை சிறுதெய்வ வழிபாட்டுக் காலங்களி லேயே பெரிதும் பயின்றுவந்தமையால் கதைகளும் சிறு தெய்வக் கதைகளாகவே விளங்கின. வில்லிசையைத் தமிழ்மக்கள் அனைவரும் கேட்டுப் பயன் எய்தப் புத்தம் புதுக் கருத்துகளுடன் உணர்வூட்டும் வரலாறுகளும் அவ் விசைப் பாடல்களாக அமைக்கப்பெறல் வேண்டும். அத் துறையில், புலவர் நவநீதகிருட்டிணனாரின் முதன் முயற்சியாகிய 'தமிழ் வளர்ந்த கதையும்' அடுத்த 'திருவள்ளுவர் கதையும்' நம் கழகவழி வெளிவந்தன. இப்போது. கற்புக்கடம்பூண்ட பொற்புடைச் செல்வியான 'கண்ணகி கதை' வில்லுப்பாட்டு வரிசையின் மூன்றாவது நூலாக வெளியிடப்பெறுகின்றது. தமிழகம் விருப்புடன் ஏற்று மகிழும் என நம்புகின்றோம்.

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார்.

# முன்னுரை

நெல்லை நாட்டில் தோன்றிப் பல்லோரானும் பாராட்டப்பெறும் வில்லிசையில் நல்ல வரலாறுகள் பயிலப்பெற்றால் பாமரரும் பைந்தமிழ்ப் பேரறிவைப் பெறுதற்கு உறுதுணையாகும். இந்த உண்மையைத் திண்மையுறக் கண்டு தெளிந்த திருவாளர் வ. சுப்பையா பிள்ளையவர்கள் வில்லிசைக்குரிய நல்ல வரலாறுகளை வெளியிட்டு வருகிறார்கள். அவர்கள் அளித்த ஊக்கத்தின் அரும்பயனாய், எளியேனால் ஆக்கப்பெற்ற தமிழ் வளர்ந்த கதையும், திருவள்ளுவர் கதையும், கழக வாயிலாக வெளிவந்துள்ளன.

இப்போது மூன்றாவது கதையாக, முத்தமிழ்க் காவியமாகிய சிலப்பதிகாரத்தைக் 'கண்ணகி கதை' என்னும் பெயருடன் இயற்றித் தந்துள்ளேன். கண்ணகியின் வரலாற்றைப் பல்வேறு மாற்றங்களுடன் காட்சியில் கண்டும், கதைகளில் கேட்டும் வருகின்ற சிலர்க்கு இந்நூல் உண்மை வரலாற்றை உணரத் துணைபுரியும் என்பதில் ஐயமில்லை. இதனை வில்லிசைத் துறையில் வல்லமையுள்ளாரும், பிற நல்லறிஞரும் ஏற்றுப் போற்றுவர் என்னும் எண்ணமுடையேன். இதனை வெளியிட்டுதவும் கழகத்தார்க்கு எனது கனிந்த நன்றி.

தமிழ் வெல்க !

அ. க. நவநீதகிருட்டிணன்

உ

தமிழ் ஓங்குக!

# கண்ணகி கதை

---

## இறைவணக்கம்

தேனூறும் தமிழெனவே தெளிநிலவைப் பொழிமதியே!
வானோரும் புகழ்வளவன் குடையெனநீ வழங்கிடுவாய்;
வையகத்துப் பேரொளியே வானொளிரும் கதிரோனே!
செய்யதிருச் சோழன்தன் திகிரியெனத் திகழ்ந்திடுவாய்;
இன்னமுத மாமழையே! மன்னுயிர்க்கும் இன்னுயிரே!
மன்னுகா விரிநாடன் இன்னருளைப் போன்றொளிர்வாய்;
தண்மதியே வெங்கதிரே தனிமழையே செஞ்சடையெம்
விண்ணவனும் கண்ணுதலின் விழிகளெனச் சடையென்ன
விளங்கிடுவீர் வாழியரோ! வியனுலகம் தழைத்திடவே
உளங்கொண்டு வணங்கினம்யாம் உயரருளைப் புரிந்திடுவீர்;
அனைத்திற்கும் ஆதியாம் இனித்தசுவைப் பரம்பொருளே!
தனித்தபெருங் காவியமாம் தமிழன்னை யடிச்சிலம்பாம்
முத்தமிழும் புத்தமுதாய் மொய்த்திலங்கும் சித்திரமாம்
வித்தகர்க்கு நல்விருந்தாம் வேந்தர்களுக் காரமுதாம்
உள்ளமெலாம் கொள்ளைகொளும் தெள்ளுதமிழ்த் தீங்கதையாம்
வள்ளல்இளங் கோவளித்த வற்றாத தேனூற்றும்
சிலப்பதி காரமெனும் செந்தமிழின் நன்னிதியை
உலப்பில் புகழ்படைத்த உயர்வுடைய பெருங்கதையை

மாதரசி கண்ணகியாள் தீதில்லா நற்கதையை
பூதலத்துப் பாவையர்க்குப் பொற்புடைய வழிகாட்டும்
பெண்ணணங்கின் வாழ்வாகும் புண்ணியநற் சரிதமதைப்
பண்ணுன இன்தமிழில் பாடவருள் பண்ணவேண்டும்
வில்லிசையில் இனிதமைத்து விளக்கவருள் கொழிக்க வேண்டும்
நல்லோர்கள் வியக்க இனி நாவிலமர்ந் துரைக்கவேண்டும்.

## வசனம்

தமிழ்ப் பெருமக்களே! தண்ணருள் தாய்மார்களே! உங்கள் பொன்னடிகளைப் போற்றி வணங்குகின்றோம். இந்தச் சமயத்திலே நந்தம் செந்தமிழ்த் தாய்மார்களுக்குத் தனித்தவொரு வணக்கம் செலுத்துகின்றோம். ஏன் என்று கேட்பீர்களோ? பெண்ணரசி கண்ணகியின் பண்ணமைந்த நற்கதையைப் பாடப் போகிறோம் அல்லவா! அதற்காகத் தான் இங்குள்ள மங்கையர்க்கரசியர் எல்லாரும், கற்பரசி கண்ணகியின் புண்ணியச் சரிதத்தை, எண்ணத்தைச் சிதறவிடாது ஒருமுகப்படுத்தி உள்ளத்தோடு கேட்க வேண்டும். கேட்டால், கண்ணகியின் கதையைக் கேட்டால், உங்கள் வீட்டிற்கு நன்மை; உங்கள் வாழ்வுக்கு இன்பம்; இந்த நாட்டிற்கே நன்மை!

கற்புத் தெய்வமாகிய கண்ணகியின் கதையைக் கன்னித் தமிழ்மொழியில் உள்ள ஐம்பெருங்காவியங்களில் ஒன்றாகிய சிலப்பதிகாரம் விரித்துச் செப்புகின்றது. இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்னர்ச் சேரநாட்டை— தற்போதைய மலையாள நாட்டை ஆண்டுவந்த மன்னனாகிய சேரன் செங்குட்டுவனின் தம்பியாக விளங்கிய இளங்கோவடிகள் என்னும் அரசுத்துறவி, சிலப்பதிகாரக் காவியத்தைத் தமிழர் சித்தமெல்லாம் தித்திக்கப் பாடியருளினர். இளங்கோவடிகள், கண்ணகி வாழ்ந்தகாலத்தில்

வாழ்ந்தவர். கண்ணகியின் அருஞ்செயல்களை நேரில்கண்ட மதுரைக் கூலவாணிகன் சீத்தலைச் சாத்தனார் வாயிலாகச் செய்திகளை நன்றாகத் தெரிந்து நற்றமிழ்க் காவியம் பாடியவர். இந்தக் காவியத்தின் இனிமையை நன்றாகக் கண்ட பாரதியார்,

"நெஞ்சை
அள்ளும் சிலப்பதி காரம்என் றோர்மணி
யாரம் படைத்த தமிழ்நாடு"

என்று பாராட்டினர்.

"தேனிலே ஊறிய செந்தமிழின்சுவை
தேரும் சிலப்பதி காரமதை
ஊனிலே எம்முயிர் உள்ளள வும்நிதம்
ஓதி யுணர்ந்தின் புறுவோமே"

என்று தமது அனுபவத்தை அழகுறக் கூறினர் கவிமணி தேசிகவிநாயகம் பிள்ளை.

இத்தகைய சிலப்பதிகாரக் காவியத்தின் போக்கை யொட்டி, இளங்கோவடிகளின் இனிய வாக்கையும் நோக்கையும் பின்பற்றிக் கண்ணகியின் கதையைச் சொல்லப் போகிறேம்.

பாட்டு

காவிரி யாறு பாயும் நாடு
பூவிரி சோலை சூழும் நாடு
பாவலர் பல்லோர் வாழும் நாடு
நாவலர் என்றும் ஏத்தும் நாடு
புறவுக் குடலை யரிந்து துலையில்
புக்க வன்சிபி யாண்டநாடு
குறைவு நீதிக் கொமகன் மேலே
கொற்ற வன்தேர் விட்டநாடு

வளங்கள் பலவும் நிறைந்த நாடு
வண்மை உழவர் மலிந்தநாடு
களங்கள் எங்கும் யானை உலவும்
கார்வளம் கொழிக்கும் நாடு
சோறு மடை அடைக்கும் நாடு
சோழன் அரசு ஆளும் நாடு
வீறு கொண்ட வீரர் வாழும்
மேன்மை மிக்க பொன்னி நாடு.
இத்தகு பொன்னி இன்ப நாட்டின்
எழில் நிறைந்த தலைநகராகும்
மெத்த வுயர் அகத்திய மாமுனி
மேவு பொதிய மாமலை போலும்
உமையொரு பாகன் உறையும் மாமலை
உயர்ந்த கங்கை பொங்கும் ஓர்மலை
இமய மாமலை போல் இலங்கும்
இனிய மாநகர் புகார் ஐயா!
காவிரி யாறு கடலொடு சேரும்
கவின் துறை யதிலே சாரும்.
காவி ரிப்பூம் பட்டினம் எனவே
கற்ற வர்கள் அதனைக் கூறும்
பகைவர் அங்குப் புகாரோ ஐயா!
பதியில் வாழ்வார் வேறு புகாரோ!
தகைமை மிக்க அந்த ஊரைச்
சாற்றினர்கள் புகார் எனப்பேர்.
புகழும் போகமும் பொங்குநல் லூராம்
புத்தே ளிர்வாழ் பதியென லாகும்
தகவும் இன்பமும் தழைக்கும் ஊராம்
தாவில் சீரார் நாகர்தம் ஊரோ!

## வசனம்

புகழும் இன்பமும் பொங்கும் புகார் நகரத்திலே இப்பர், கவிப்பர், பெருங்குடியர் என்னும் மூவகை வணிகர்கள்—அஃதாவது வியாபாரம் செய்யும் செல்வச் செட்டிமார்கள் வாழ்ந்து வந்தார்கள். இப்பர் என்பார் குறைந்த செல்வமுடைய செட்டிமார்கள். பெருங்குடியர் என்பார் நிறைந்த பெருஞ்செல்வமுடைய செட்டிமார்கள். கவிப்பர் என்பார் நடுத்தரமான செல்வமுடைய செட்டிமார்கள். பெருங்குடியர் என்பார், அரசனைப் போன்ற பெருஞ் செல்வமும் அரும்புகழும் படைத்த பெரிய வியாபாரிகள் ஆவார்கள். பெருங்குடியர் என்பதற்கு மற்றொரு பொருளும் உண்டு. என்றாலும் மதுவை விலக்கிய நம் நாட்டில் அந்தப் பொருளை இந்தக்காலத்தில் கொள்ளமாட்டார்கள் பெருங்குடியர் மரபிலே பிறந்த சிறந்த செல்வனாகிய மாநாய்கன் என்பான் ஒருவன் இருந்தான். அந்த மரபில் மாசாத்துவான் என்னும் வணிகனும் சிறந்து விளங்கினான்.

வானம்போல் வழங்கிடும் வள்ளல்
மாநாய்கன் மாதவச் செல்வன்
மேனாளில் செய்த தவத்தால்
மேன்மையுற வந்த குலக்கொடி
திருமகளும் அவளை யொப்பாள்
தீதில்லா அருந்ததி கற்பாள்
பெருமையுறு குணங்கள் எல்லாம்
பேணுவாள் கண்ணகிப் பேராள்
நாடாளும் மன்னனை யொப்பான்
நற்குடியில் செல்வம் மிக்கான்
தேடிவரும் செல்வம் எல்லாம்
செய்யவறம் செய்து உவப்பான்

மாசாத்து வான்நல் வாணிகன்
மாபெரும் தவத்து மைந்தன்
நேசத்துக் கோவலன் என்பான்
நேரில்லாப் பேரழகு அன்பான்
மண்ணகம் பரவிய புகழான்
மங்கையர்கள் ஏத்தும் எழிலான்
பண்ணமையச் செவ்வேள் என்று
பாராட்டும் சீரார் வீரன்
பதினாறு வயதுப் பருவம்
பாலனெழில் சீலன் கோவலன்
மதிமுகத்து மாதர் கண்ணகி
மகிழ்பன்னீ ராண்டு அடைந்தாள்
உலவநலம் பருவ நலங்கள்
உயர்வுடைய காதல் உளங்கள்
திருவுடைய இருவர் தமையும்
திகழமணம் செய்ய நினைந்தார்
வள்ளலாம் மாசாத்து வானும்
மாநாய்கச் செல்வன் தானும்
தெள்ளுபே ரறிஞர்கள் முன்னே
திருமணம் உறுதி செய்தார்
மணத்திற்கு நன்னாள் கண்டார்
மனத்தினுக் கினியன கொண்டார்
குணத்திற்கு மின்னார் பல்லோர்
குவலயம் சொல்ல எழுந்தார்
மங்கலநற் பெண்கள் பல்லோர்
வருங்குன்ற யானைகள் மேலே
பொங்குமணம் சொல்ல எழுந்தார்
புனிதவாத் தியங்கள் முழங்க

திங்கள் உரோகிணியைக் கூடும்
செய்யமணம் தங்கும் நாளில்
மங்கலநல் லோரை யதனில்
மணவிழா நடக்கும் என்றார்

## வசனம்

ஆண்டின் பன்னிரு மாதங்களையும் ஆறு பருவங்களாகப் பகுத்திருக்கிறார்கள். இவ்விரு மாதங்கள் ஒவ்வொரு பருவமாகக் கொள்ளப்படும். சித்திரையும் வைகாசியும் தித்திக்கும் இளவேனிற்காலம். மணந்தார்க்கு இன்பமும் தணந்தார்க்கு - பிரிந்தவர்க்குத் துன்பமும்தரும் காதல் கருவேளுக்குரிய காலம். இந்த மாதங்களில்தான் தமிழ் நாட்டில் சிறப்பாகத் திருமணம் நடைபெறும். சந்திரனுக்கு இருபத்தேழு நட்சத்திரங்களும் இன்பம் அளிக்கும் அன்பு மனைவியர்கள். அவற்றுள் உரோகிணியிடத்து அளவற்ற காதலுடையவன் சந்திரன்; அவன் உரோகிணியைக் கூடுகின்றநாள் மணத்திற்குரிய சிறந்தநாள் எனத் தெரிந்து கண்டனர் நம் முன்னோர். உரோகிணியைக் கூடினநாளில் சந்திரன் உச்சனாதலால் எவ்வகையான தீங்கும் நீங்கும் என்பது பாங்கான கருத்து. சித்திரைத் திங்கள் வளர்பிறை நாளில் உரோகிணி நன்னாள் வந்துற்றது. அந்த நல்லநாளிலே,

## பாட்டு

மங்கல முரசு முழங்கியதே
மாமுருடு அதிர்ந்து கறங்கியதே
சங்கின முழங்கி யொலித்தனவே
தண்ணுமை இன்னிசை யார்த்தனவே
வயிர மணித்தூண் நாட்டியிட்டார்
மாலைகள் வரிசையாய்த் தொங்கவிட்டார்

பயிலும் நீல விதானமிட்டார்
பன்மணி முத்துப்பூம் பந்தலிட்டார்
அருந்ததி யன்னுள் கண்ணகியாள்
அணிமணம் காண நிறைந்துவிட்டார்
பெருந்தகைக் கோவலன் திருமணத்தைப்
பேணியே கண்டிடச் சூழ்ந்துவிட்டார்
பண்ணிய புண்ணியம் யாதையா
பார்த்தவர் வியந்து மகிழ்ந்துநின்றார்
எண்ணரும் பேரெழில் கண்ணகியும்
இன்பக்கோ வலனும்கை கோத்துநின்றார்
மாமுது குருக்கள் மறைகாட்ட
மகிழ்ந்தவர் தீவலம் செய்துவந்தார்
மாமலர் ஏந்திய மங்கையர்கள்
மணமக்கள் பின்னால் விரைந்துவந்தார்
சந்தனம் தாங்கிய மங்கையரும்
சவ்வாது மணப்பொருள் தாங்கினரும்
கந்தமார் நறும்புகை ஏந்தினரும்
காசில் விளக்கொளி ஏந்தினரும்
பாலிகை முளைக்குடம் தாங்கினரும்
பன்மணிக் கலங்களைத் தாங்கினரும்
சாலவும் கமழ்சுண்ணம் தாங்கினரும்
சற்றும் அகலாது சூழ்ந்துவந்தார்
மாமலர் தூவியே வாழ்த்திநின்றார்
மதனும் ரதியும்போல் வாழ்க ! என்றார்
தாமரைக் கண்ணனும் தையலும்போல்
தாரணி வாழ்க ! வாழ்க ! என்றார்.
இந்திரன் இந்தி ராணியைப்போல்
இன்ப மணக்கோலம் தாங்கிநின்ற

சொந்தநன் மக்களைக் கண்டபெற்றோர்
சொக்கி யுள்ளம்இன்ப வெள்ளம்வீழ்ந்தார்
என்ன தவஞ்செய்தோம்! கண்ணகியாள்
ஏற்றநன் மருகியாய் வந்தடைந்தாள்
இன்ன உரைகளை இயம்பிநின்றார்
ஏந்தல் கோவலனை யீந்தமக்கள்
மாலோன் அவதார மானசீலன்
மாமுரு கன்எனும் எழிற்பாலன்
மேலைத் தவத்தால்நம் மருமகனாய்
மேவினம் என்றான்மா நாய்கமன்னன்
கண்ணகி யைப்பெற்ற புண்ணியத்தாய்
கண்டதன் மருகனும் கோவலனைக்
கண்ணிமை கொட்டாது பார்த்துநின்றாள்
கட்டழ கன்இவன் தெய்வமென்றாள்
பார்த்தவர் அனைவரும் ஆர்த்துநின்றார்
பார்செய்த புண்ணியம் என்னவென்றார்
ஆர்த்தவர் வாழ்த்திய வாழ்த்தொலிகள்
அகில உலகமும் கேட்டதையா!

**வசனம்**

புதுமணம் கொண்ட கோவலனும் கண்ணகியும் புத்தமுதும் சுவையும்போல் சித்தங்கலந்து, கணப்பொழுதும் பிரியாமல் கனிந்த இன்பத்தைத் துய்க்கலானார்கள். கொழுங்குடிச் செல்வனாகிய மாசாத்துவான் மாளிகை எழுடுக்கு மாடங்களை யுடையது. அவற்றுள் நாலாவது மாடமாகிய நடுநிலை மாடத்தில் இடையறாத இன்பவெள்ளத்தில் மூழ்கினார்கள். கருத்தொருமித்த காதற் செல்வங்களாகிய கோவலன் கண்ணகியின் புதுமணவாழ்வைக் கண்டு, அவர்தம் பெற்றோர்கள் அளவற்ற மகிழ்ச்சியடைந்தார்கள்.

### பாட்டு

எழுநிலை மாடத்தில் நடுநிலை மாடத்தில்
முழுமணி பதித்திட்ட மொய்யொளி யார்கட்டில்
வாசநன் மலரெல்லாம் தேசுறப் பெய்திட்ட
வீசொளி பொற்கட்டில் மேவினர் இருவோரும்
கோலங்கொள் சாளரத்தின் குறுங்கண் வழியாக
மால்தரும் மென்காற்று வந்திடும்இன் தென்றல்
கண்டனர் மணமக்கள் காதலின் மிக்கார்கள்
கொண்டனர் அணியெல்லாம் விண்டனர் தம்முள்ளம்
ஏறினர் நிலாமுற்றம் இயன்மதி கண்டார்கள்
வீறின பேரின்பம் மேவினம் என்றார்கள்
பூக்கள் நிறைசேக்கை புகுந்தினி திருந்தார்கள்.
கோக்கள் புகழ்செல்வன் கோவலன் மனம்பொங்கிக்
கண்ணகி எழில்கண்டான் பண்ணமை மொழிகொண்டான்
தண்ணொளி நலமுண்டான் தன்னுள நிலைசொன்னான்
மாசறு பொன்னே! நல் வலம்புரிமுத்தே! என்
காசறு விரையே! மென் கரும்புறு தீந்தேனே!
அரும்பெறற் பாவாய்! என் ஆருயிர்க்கு ஓர்மருந்தே!
பெருங்குடி வாணிகன்றன் பெருமட நன்மகளே!
என்சொல்லிநின்னலங்கள்ஏத்துவன்இப்போதென்றான்.

### இசை வேறு

மலையிடைப் பிறவா மணியே என்கோ!
அலையிடைப் பிறவா அமிழ்தே என்கோ!
யாழிடைப் பிறவா இசையே என்கோ!
தாழிருங் கூந்தல் தையலே! உன்னை

### இசை வேறு

கண்ணகிப் பெண்ண ணங்கின்
கட்டழ கதனைக் கண்டு

பண்ணுறு குழலும் யாழும்
பாங்கமழ் தச்சொல் கேட்டு
விண்ணமிழ் தென்னும் செவ்வாய்
மேவுநீர் அதனை யுண்டு
தண்ணொளி மேனி யுற்றுத்
தாங்குநல் மணம் உயிர்த்தான்.

வசனம்

"கண்டுகேட்டு உண்டுஉயிர்த்து உற்று அறியும் ஐம்புலனும் ஒண்டொடி கண்ணே உள"

என்றார் தெய்வப் புலவர் திருவள்ளுவனார். ஐம்புல இன்பங்களையும், அன்பும் அறிவும் அழகும் ஒருங்கு நிறைந்த பெருங்குண மங்கையிடத்தே ஒருவன் பெறலாம் என்பதே இதன் கருத்து. அவ்விதமே ஐம்புல இன்பங்களையும் கண்ணகியிடத்தே கோவலன் பெற்று மகிழ்ந்தான். இவர் தம் இன்பவாழ்வைக்கண்ட மாசாத்துவான் மனைவி - கோவலன் தாய், மகனையும் மருமகளையும் தனிமனைக்கண் வாழவைத்து; அவர்கள் இல்லறத்தை இனிது நடத்துவதைக் காணவேண்டுமெனப் பேராவல் கொண்டாள். பலவகைச் செல்வமொடு பணியாட்களும் கொடுத்துத் தனிமாளிகையில் தங்கச் செய்தாள்.

"அறவோர்க்கு அளித்தலும் அந்தணர் ஓம்பலும்
துறவோர்க்கு எதிர்தலும் தொல்லோர் சிறப்பின்
விருந்தெதிர் கோடலும்"

ஆகிய சிறந்த அறங்களை ஆற்றுதற்குரிய இல்லறத்தை எல்லோரும் போற்றும் வகையில் சில்லாண்டுகள் கோவலனும் கண்ணகியும் குதூகலமாய் நடத்தினார்கள்.

## பாட்டு

வானுலகில் இந்திரன் சிந்தைமகிழ் சபையில்
வானவர்கள் முனிவர்கள் வந்துவந் திருந்தார்
இந்திரனின் மைந்தனவன் எழில்நிறை சயந்தன்
சுந்தரக் கோலமொடு வந்தரு கிருந்தான்
பேரழகி ஊர்வசி சீர்நடனம் ஆட
ஆர்சபை யமர்ந்தவர் அகங்களிப் புற்றார்
சயந்தன்மேல் பேரன்பு சாரும்ஊர் வசியாள்
நயந்தவனை நோக்கியே நாட்டியம தாடினாள்
காதல்வெறி யேறவே களிநடனம் மாறவே
தீதுபல கண்டனன் தெய்வமுனி அகத்தியன்
கோபமது கொண்டனன் குறுமுனி அகத்தியன்
சாபமது தந்திடத் தவமுனி எழுந்தனன்
ஒய்யார நடனங்கள் ஆடும்ஊர் வசியே!
செய்யாத குற்றங்கள் செய்ததுன் மதியே
தவமுனிவர் பல்லோர்கள் சார்ந்தபே ரவையை
அவமதிப் பதுபோலத் தவறாக ஆடினாய்
இந்திரன் சபையென்னும் எண்ணத்தை விட்டாய்
சிந்தையில் தகாதபல் சிந்தனைகள் கொண்டாய்
கடமையை மறந்தாய் கருத்தினை இழந்தாய்
மடமையால் ஊர்வசி மண்ணுலகு செல்வாய்
எனச்சபித் திட்டனன் இனியதமிழ் முனிவன்
கனங்குழையின் ஊர்வசி காசினி பிறந்தாள்
காவிரிப்பூம் பட்டினக் கணிகையர் குலத்திலே
மாதவிநன் மங்கையாய் மாநிலம் உதித்தாள்
ஊர்வசியின் அவதாரம் ஒப்பற்ற மாதவி
பேர்பெற்ற சீருற்ற பெருநடன மாதவள்
அத்தகைய மாதவியின் அருமரபில் வந்தாள்
சித்திரா பதிபெற்ற செய்யகலை வாணி

உலகிலுறும் அழகெலாம் ஒருங்குதிரள் செல்வி
அலகில்பல கலைகளும் நிலைபெறு குணங்களும்
தேடியவள் காலடியை நாடிவரும் ஐயா !
கோடிப்பொன் ஈந்தேனும் கொள்ளலாம் அவளை

வசனம்

இங்ஙனம் கணிகையர் குலத்திலே பிறந்து, இயற்கையிலேயே அறிவும் அழகும் ஒருங்கு செறிந்த பெருங் குணச் செல்வியாகிய மாதவிக்கு ஐந்தாண்டுகள் நிரம்பின. அப்போது சித்திராபதியாகிய அவள் தாய் அவளுக்கு நாட்டியக் கலையில் வல்ல நல்லாசிரியர்களைக் கொண்டு நடனக்கலையைப் பயிற்றுவித்தாள். இசைக்கலையில் வல்ல இன்னிசை வாணர்களைக் (சங்கீத வித்துவான்கள்) கொண்டு இசையைப் பயிற்றுவித்தாள். ஏழாண்டுகள் இசை, நடனம் ஆகிய இரு கலைகளையும் நன்றாக முயன்று பயின்றாள் மாதவி. ஆடல், பாடல், அழகு என்னும் மூன்றிலும், தனது பன்னிரண்டு வயதுப் பருவத்தில் தன்னகரில்லாத பெண்ணணங்காய் விளங்கினாள். மாதவியின் ஒய்யார நடனத்தையும் உல்லாச கானத்தையும் ஒப்பற்ற பேரழகையும் பார்த்துப்பார்த்து உள்ளம் பூரித்த அவள் தாய் கரிகாற் சோழமன்னன் திருமுன்பை அடைந்தாள். மகள் மாதவியின் ஆடல், பாடல், அழகு ஆகியவற்றை விளக்கிக் கூறினாள். அவளது நாட்டிய அரங்கேற்றம் மன்னன் பேரவையில் மாண்புற நடைபெறவேண்டும்; அரசனின் அன்பு வாழ்த்து அவளுக்குக் கிடைக்கவேண்டும் என்று பணிவுடன் வேண்டிக்கொண்டாள். அரசன் கரிகால் சோழன் நாட்டியக் கலையில் நன்கு தேர்ச்சிபெற்றவன். ஆதலின் மாதவியின் நாட்டிய அரங்கேற்றம், தன் சபையிலே நடைபெறச் சம்மதித்தான். அரங்கேற்றத்திற்கு

வேண்டுவன செய்யுமாறு அமைச்சர்கட்கு ஆணையிட்டான். அரங்கேற்ற நாள் குறிக்கப்பட்டது. கலைவல்ல புலவர்க்கும், சுவைகொள்ளும் அறிஞர்க்கும் (ரசிகர்கள்), அருள் உள்ள செல்வர்க்கும் அழைப்பு விடுத்தான்.

பாட்டு

காவிரிப்பூம் பட்டினத்தில்—பட்டினத்தில்
கரிகாலன் திருநகரில்—திருநகரில்
பாவலர்கள் துதிக்குமவன்—துதிக்குமவன்
பண்ணமைந்த மாசாத்துவான்—மாசாத்துவான்
பெற்றெடுத்த நற்புதல்வன்—நற்புதல்வன்
பெருமை கொண்ட கோவலனும்—கோவலனும்
கற்றபெருங் கலைவாணன்—கலைவாணன்
கலையருமை அறிந்திடுவான்—அறிந்திடுவான்
திருமகளும் கலைமகளும்—கலைமகளும்
மருவுமொரு திருவாளன்—திருவாளன்
உருவமிகு பேரழகன்—பேரழகன்
உத்தமனும் கோவலற்கும்—கோவலற்கும்
அரங்கேற்ற அழைப்பிதழும்—அழைப்பிதழும்
அரசனவன் அனுப்பிவிட்டான்—அனுப்பிவிட்டான்
விரைந்துசபை அடைந்துவிட்டான்—அடைந்துவிட்டான்
மேலான கோவலனும்—கோவலனும்
கரிகாலன் சபையடைந்த—சபையடைந்த
கலைவள்ளல் கோவலனும்—கோவலனும்
அருகிருந்த ஆசனத்தில்—ஆசனத்தில்
அமர்ந்துமகிழ்ந்து இருந்தானய்யா—இருந்தானய்யா
கலைவல்ல புலவரெல்லாம்—புலவரெல்லாம்
கருணையுள்ள செல்வரெல்லாம்—செல்வரெல்லாம்
கலையழகைக் காண்பதற்கு—காண்பதற்கு
கருத்துடனே வீற்றிருந்தார்—வீற்றிருந்தார்.

சோழமன்னன் கரிகாலன்—கரிகாலன்
சொல்லரிய கோலமுடன்—கோலமுடன்
ஆழ்மதிநல் அமைச்சரெல்லாம்—அமைச்சரெல்லாம்
ஆர்ந்துசூழ வந்தடைந்தான்—வந்தடைந்தான்
வந்தடைந்த மன்னவனை—மன்னவனை
வாழ்கஎன்றுவாழ்த்தியிட்டார்—வாழ்த்தியிட்டார்
வந்தனைகள் செய்துநின்றார்—செய்துநின்றார்
வருகவென்றான் மன்னவனும்—மன்னவனும்
அரங்கேற்றம் தொடங்கிடுவீர்—தொடங்கிடுவீர்
அமைச்சர்களே! அழைத்திடுமின்—அழைத்திடுமின்
சிரங்கொள்ளும் கட்டளையை—கட்டளையை
சித்திராபதி அறிந்திட்டாள்—அறிந்திட்டாள்

### இசை வேறு

தாமரைக் குளமென விளங்குதையா
தக்கவர் சூழ்கலை மண்டபமையா
காமரைப் போலங்கு இருந்தனரையா
கற்றவர் நற்றவர் பல்லோர்களையா
அவையினர் கண்களோ அன்றலர்தாமரை
என்றியம் பும்படி இலங்கினவையா
நவையற்ற அன்னம்போல் வந்தனளையா
நங்கைபொன் மாதவி மங்கையுமையா
தேவமா தோவென வியந்தனரையா
திருமகள் மாதவியைக் கண்டவரையா
தேவர்போல் இமையாது இருந்தனரையா
திடுமென முழவொலி கேட்டனரையா
யாழிசை குழலிசை முழவிசைஎல்லாம்
இன்னிசை யாகவே முழங்கினவையா

தாழ்குழல் மாதவி ததிங்கிணத் தோமெனத்
தாள்பெயர்த் தாடினுள் பாடினளையா
ஆடலொலி பாடலொலி கேட்டவர்களையா
அதன்பின்னர் தந்நிலை அடைந்தனரையா
தேடரிய பேரழகி சீருடைய மாதவி
தேவமா தவள்போல் ஆடினளையா
மயிலென்ன ஒளிவீசும் மாதவியின் மேனி
மார்பணிகள் சுடர்வீச மங்கிடும் நாணி
குயிலென்ன இசைபாடும் கோதைகலை வாணி
கோவலன் உளங்கவரும் அவள்நடன பாணி
மின்னலின் கொடியென்ன மேனியொளி வீசும்
மேதக்க மாதவி, கோவலன் மனத்தை
இன்னமுதம் எனஆடல் பாடல்பருகு உளத்தை
ஏற்றமுற நோக்கினள் ஆற்றலுற ஆடினள்
கலைநுட்பம் உணர்மன்னன் கரிகால் வளவன்
கட்டழகி மாதவி கலைத்திறமை கண்டான்
கலைக்கோல் அரிவையெனப் பட்டத்தை யீந்தான்
தக்கமர கதமாலை பரிசாகத் தந்தான்
ஆயிரத் தெட்டுக் கழஞ்சுப்பொன் னீந்தான்
அன்போடு அவள்கலைத் திறமையை வியந்தான்
தாயவள் சித்திரா பதியுள்ளம் குளிரத்
தக்கபுகழ் மொழிகள்பல வாழ்த்துட னுரைத்தான்
மாதவியும் அன்னையும் மன்னவனை நண்ணி
மலரடி வணங்கிவிடை பெற்றுமனை யுற்றார்
சீதவொளி வீசுமர கதமாலை யதனை
திறமைமிகு கூனிமகள் கையிற் கொடுத்தாள்
நம்பியர்கள் பல்லோரும் நாடிவரும் வீதி
நால்வீதி கூடும் சதுக்கத்தைச் சேர்தி

அம்பொன் ஆயிரத்தெண் கழஞ்சினைத் தந்தே
அரியமர கதமாலை பெறுவோர் உவந்தே
கலையரசி மாதவியை அடைவார் விரைந்தே
காதலராய் வாழ்நாள் முழுதும் மகிழ்ந்தே
நிலைபெற விருக்கலாம் எனும்உண்மை கூறி
நேர்மையொடு பெறுவாரைஅழைத்துவாஎன்றாள்

வசனம்

இங்ஙனம் மாதவியால் அனுப்பப்பெற்ற கூனி, நகரத்து நம்பியர்கள், நற்குடி பிறந்த செல்வக்காளையர்கள் வந்துகூடும் சந்திச் சதுக்கத்தை அடைந்தாள். பச்சை யொளிவீசும் மணிமாலையைக் கையிலேந்தி நின்றாள். அங்குவந்த பெருங்குடிச் செல்வக்குமரனாகிய கோவலன் அவள் பக்கம் வந்தான். செய்தியைத் தெரிந்தான். சிந்தை உவந்தான். செப்பிய பொன்னைத் தப்பாது கொடுத்தான். அக் கூனியுடன் மாதவியின் மனையை அடைந்தான். மாதவியைக் காதற்கிழத்தியாக ஏற்றான். அவளைச் சற்றும் விட்டுப்பிரியாது, கட்டித் தழுவிக் காதல் இன்பத்தைப் பெற்றான். கற்புக்கரசியாம் கண்ணகியை மறந்தான். மாதவியின் மனையிலேயே இணைபிரியாது தங்கிவிட்டான். இந்தச் செய்தியை அவனது சொந்த மனைவியாகிய கண்ணகி அறிந்தாள்.

பாட்டு

ஐயோ ! அவளடைந்த துயரம்அள வுண்டோ !
மெய்யோ இதுசெய்தி எனக்கதறி அழுதாள்
புண்ணாய் உலைந்தவள் புலம்பியழு திட்டாள்
கண்ணகி மனத்துயரை மாற்றுபவர் யார்தாம் !
நாவல்ல மங்கையர்கள் நவிலுமொழி யாமோ
கோவலன் அன்பன்றோ அவள்துயரை மாற்றும்

அன்னவன் அன்புநீர் வற்றியதனாலே
மின்னவள் கண்ணகி மனப் பயிரின் வாட்டம்
சிற்றடி யணியும்நற் சிலம்பணி இகழ்ந்தாள்
உற்றதுடி இடையணி மேகலை இழந்தாள்
காதணி கழுத்தணி அனைத்தையும் இழந்தாள்
போதனைய கண்களில் தீட்டுமை யொழிந்தாள்
திங்கள்போல் நெற்றியில் திலகம் ஒழிந்தாள்
அங்கவள் கூந்தலில் அணிநெய் யொழிந்தாள்
மனத்தமர் காதலன் மாண்புடைய கோவலன்
இனிக்கவுளம் என்றைக்கு வருவனென்று ஏங்கினாள்
கடவுளைக் கண்டிடக் கடுந்தவம் இயற்றிடும்
திடமுள்ள தவசிபோல் திருமனை இருந்தாள்

### வசனம்

இங்ஙனம் கணவனைப் பிரிந்து கடுந்துயரம் அனுபவிக்கும் கண்ணகிக்கு ஆருயிர்த்தோழி ஒருத்தி இருந்தாள். அவள் பார்ப்பனக்குலத்தில் பிறந்த பாவை - பிராமணத்தி. அந்தக் காவிரிப்பூம்பட்டினத்திலேயே பிறந்து வளர்ந்த பெண். தேவந்தி என்ற பெயரை யுடையவள். இளமை முதற்கொண்டே கண்ணகியுடன் பழகி நட்புக்கொண்ட நங்கை. இத் தேவேந்தியும் கணவனைப் பிரிந்து வருந்தும் காரிகையாவாள். ஆதலால் கணவனைப் பிரிந்த பெண்களின் மனநிலையை அனுபவத்தில் கண்டறிந்தவள். இப்போது கண்ணகியின் நிலைகண்டு கலங்கினாள். கனலிடைப் பட்ட மெழுகென உள்ளம் உருகினாள். ஆறுதல் மொழிகளால் கண்ணகிக்குத் தேறுதல் கூறுவாள். தேவந்தியின் அன்பு மொழிகள் கண்ணகியின் உள்ளத்திற்கு அமைதியளித்தன. அவளிடம் கண்ணகி, தனக்கு உற்றதை யுரைத்து உள்ளந்தேறுவாள்.

### பாட்டு

கற்பரசி கண்ணகியின் காதல்நிறை தோழியவள்
பொற்புடைய தேவந்தி புறப்பட்டாள் கோயிலுக்கு
சாத்தன் திருக்கோயில் சார்ந்து வணங்கிட்டாள்
சேர்த்த சிறுபூஜை நெல்லறுகு சிந்தியிட்டாள்
கோவலனும் கண்ணகியும் கூடஅருள் புரியென்றாள்
நாவால் துதித்தவனை நயந்து தொழுதிட்டாள்
கண்ணகியின் இல்லம் கடிதே அடைந்திட்டாள்
என்னரிய தோழி! நீ இன்பம் பெறுவையென்றாள்
ஆருயிர்க் கணவனவன் அன்பார்ந்த கோவலனும்
சேருவான் சீக்கிரமே சிறிதும் கலங்கவேண்டாம்
ஐயமின்றி யான் சொன்னேன் மெய்யதனைக் கண்டுரைத்தேன்
வையத்தில் பொய்யாது சாத்தன் வழங்குமொழி
கண்ணகியே தேறிடுவாய் கணவன் இதோ! வந்திடுவான்
உன்னுடைய தோழியான் உரைத்தமொழி தப்பாது

### வசனம்

என்று பலவாறு தேவந்தி, கண்ணகியின் கவலை நிறைந்த மனத்தை மாற்றித் தேற்றிக்கொண்டிருந்தாள். இத்தகைய நாட்களிலே ஒருநாள், காவிரிப்பூம்பட்டினத்தில் ஆண்டுதோறும் சிறப்பாக நடைபெறும் இந்திரவிழா வந்து சேர்ந்தது. அன்று சித்திரை மாதம் பௌர்ணமி நாள். சித்திரை நட்சத்திரமும் பூரணசந்திரனும் கூடிய நாள். சித்திரைக்குச் சித்திரையில் சீரார் பௌர்ணமியில் நடைபெறும் விழா இந்திரவிழா.

### பாட்டு

இந்திர விழாவின் ஏற்றத்தைக் கேளும்
எங்கும் மங்கல முழக்கமே சூழும்

சுந்தரத் தோகையர் ஆடவர்கள் நாளும்
சுற்றி உலாவியே இன்பத்தில் ஆழும்
பிறப்பிறப் பில்லாத பெருமானின் கோயில்
பெம்மான் முருகவேள் திருமாலின் கோயில்
சிறப்பார் திருக்கோயில் எங்கும் விழாக்கள்
செய்ய பூசனைகள் தங்கும் விழாக்கள்
அங்காடிப் பூதத்திற் கன்பான பொங்கல்
அரியமறக் குடிமாதர் அழகாக இட்டார்
மங்கலக் குரவைநற் கூத்தினை அடித்தார்
மணிமுடிச் சோழனும் வாழ்கென்று துதித்தார்
மாடமா ளிகையெங்கும் மங்கலக் கொடிகள்
மன்றங்கள் வீதிகள் தோரணப் பிடிகள்
கூடகோ புரமெலாம் குலவும்பொற் படிகள்
கூடுநாற் சந்தியில் ஒலிக்குமே துடிகள்
அறவுரை விரிவுரை எங்கும் முழங்கும்
அரியசொற் பொழிவுரை பொங்கித் துலங்கும்
மறவர்கள் வீரங்கள் காட்டித் திகழ்வார்
மதிமுக மாதர்கண் காட்டியே மகிழ்வார்
எவ்விடமும் இன்பமே பொங்கிக் குலாவும்
ஏற்ற சுடர்விளக்கு எங்கும் நிலாவும்
செவ்விபூ ரணகும்பம் சேர்ந்தே விளங்கும்
சீரான பாலிகை வீறித் துலங்கும்
பெண்டிர் ஆடவருடன் கடலாட வந்தார்
பேதை மாதவியும் கடலாட வந்தாள்
அண்டர் கோனென்னக் கோவலனும் வந்தான்
ஆர்ந்த பரிவாரம் சூழ்ந்துவர வந்தான்
குதிரைகள் பூட்டிய தேரேறி வந்தார்
கோவலனும் மாதவியும் கடலாட வந்தார்

பதியினர் பார்த்தவர் பரவசம் கொண்டார்
பத்தினிக் கண்ணகி செய்பாவமே தென்றார்
புன்னைமர நீழலைக் கரையினில் கண்டார்
பொன்மணல் அங்கே நிறைந்ததைக் கண்டார்
அன்னவிடம் தங்கற் கரியவிடம் என்றார்
அழகிய கூடாரம் அமைக்கவே நின்றார்
சித்திரத் திரையினைச் சுற்றிலும் வளைத்தார்
சிங்கார விதானம் சேர்த்தே பிணித்தார்
அத்தகு கூடாரம் உள்ளே புகுந்தார்
அழகான கட்டிலின் மீதே இருந்தார்

வசனம்

இந்திரவிழாவின் முடிவிலே சந்திரவதனத்து மாதர்களும் சுந்தரப் பொன்மேனி இளைஞரும் கடலாடி வருதற்குக் களிப்போடு செல்வார்கள். அந்த முறையில் கடலாட வந்த கோவலனும் மாதவியும் கடற்கரையில் அமைந்த, தாழைவேலி சூழ்ந்த, தனிப் புன்னைமரத்தின் தண்ணிய நிழலிலே தங்கினர். மாதவி, தனது காதல் தோழியாகிய வசந்தமாலையின் கையமர்ந்த யாழைக் கடிதே வாங்கினள். சித்திரப்பூங்கட்டிலில் சித்தங்குளிரப் பக்கத்தே யிருந்த பண்பான - அன்பான கோவலன் திருக்கையில் விருப்போடு கொடுத்தாள்.

பாட்டு

கொடுத்த யாழைக் கோவலன் வாங்கித்
தொடுத்த நரம்பைத் துளக்கி இசைத்தான்
குரலிசை யாழிசை குழைய இசைத்தான்
திரமுறு பாலைத் தீம்பண் இசைத்தான்
கானல் பாட்டு காவிரிப் பாட்டாம்
தேனிகர் இன்னிசைத் தீந்தமிழ்ப் பாக்கள்

பண்ணுறு யாழிசைப் பண்ணொடு குலவ
இன்னமு தென்ன இசைத்து மகிழ்ந்தான்
காதல் விளக்கும் கனிவரிப் பாக்கள்
ஓதி இசைத்தான் உயர்ந்த கோவலன்
பாட்டில் காதல் காட்டி இசைத்தான்
நாட்டம் மற்றோர் நங்கை மீதெனக்
கண்டவர் ஐயம் கொண்டிட இசைத்தான்
தண்டமிழ்ப் பாடல் சாற்றியது சொல்வோம்

**இசைவேறு**

திங்கள் மாலை வெண்குடையான்
சென்னி செங்கோல் அதுவோச்சிக்
கங்கை தன்னைப் புணர்ந்தாலும்
புலவாய் வாழி காவேரி
கங்கை தன்னைப் புணர்ந்தாலும்
புலவாது ஒழிதல் கயற்கண்ணாய்
மங்கை மாதர் பெருங்கற்பென்(று)
அறிந்தேன் வாழி காவேரி

**வசனம்**

இத்தகைய பல ஆற்றுவரிப் பாட்டுக்களையும் கானல் வரிப்பாட்டுக்களையும் கோவலன் யாழில் அமுதெனக் குழைத்து இசைத்துப் பாடினான். அவனது காதல் பாக்களைக் கருத்தோடு கேட்ட மாதவி, தானும் மற்றோர் ஆண்மகன்மீது காதல் கொண்டவளைப்போல விளையாட்டாக வேடிக்கைப் பாடல் பாடத் தொடங்கினாள். அவள் பாடிய பாட்டையும் கேட்டு மகிழுங்கள்.

**பாட்டு**

கைதை வேலிக் கழிவாய் வந்தெம்
பொய்தல் அழித்துப் போனார் ஒருவர்.

பொய்தல் அழித்துப் போனார் அவர்நம்
மையல் மனம்விட்டு அகல்வா ரல்லர்
கானல் வேலிக் கழிவாய் வந்து
நீநல் கென்றே நின்றார் ஒருவர்
நீநல் கென்றே நின்றார் அவர்நம்
மானேர் நோக்கம் மறப்பா ரல்லர்
அன்னம் துணையோடு ஆடக் கண்டு
நென்னல் நோக்கி நின்றார் ஒருவர்
நென்னல் நோக்கி நின்றார் அவர்நம்
பொன்னேர் சுணங்கில் போவா ரல்லர்

### வசனம்

இவ்விதம் மாதவியும் மற்றொருத்தன்மேல் பற்றுடையாள்போலப் பாடிய பாட்டைக் கேட்டான் கோவலன். அவள் உண்மையில் அங்ஙனம் வேறொருவன்மேல் விருப்பம் கொள்ளவில்லை; கோவலன் பாடிய பாட்டிற்குப் போட்டியாகவே விளையாட்டாகப் பாடினாள். ஊழ்வினை உருத்து வந்து ஊட்டியதாகலின் விளையாட்டே வினையாய் முடிந்தது. 'கானல்வரி யான் பாடக் காதல்வரி பாடினாள் இந்தக் கணிகை; மாயப்பொய் பலகூட்டும் மாயத்தாள் பாடினாள்; வஞ்சமற்ற என்னை வஞ்சித்தாள் வஞ்சகி; போதும் இவள் உறவு!' என்று, மாதவியைப் பிரிந்து புறப்பட்டான். பணியாட்கள் சிலர், தன்னைச் சூழ்ந்துவரத் தனது மணிமாளிகையை நோக்கி விரைந்து நடந்தான் கணவனைப் பிரிந்து வருந்தும் கண்ணகி, தன அருந்துணைத் தோழி தேவந்தியிடம் தான் இரவில் கண்ட கனவை இயம்பிக்கொண்டிருந்தாள். தான் கண்ட கனவால் என்ன தீங்கு நேருமோ என்று ஏங்கியவண்ணம், பாங்கியிடம் கனவைப் பகர்ந்துகொண்டிருந்தாள்.

பாட்டு

பாங்கியே தேவந்தி ! பகருமுறை கேளாய்
தூங்கிய நேற்றிரவு தோன்றிய கனவை
உன்னிடம் சொல்லாமல் உள்ளமது தேறேன்
என்னுடைய அன்பரும் யானும்கை கோத்தோம்
இந்நகர் நீங்கிவே றுற்றநகர் கண்டோம்
அந்நகர் மக்களெமை அடாப்பழி சுமத்த
அன்பரெம் கணவர்க்குத் துன்பம்வந்த தையோ !
துன்பமது கண்டியான் புழுப்போல் துடித்தேன்
இடுதேள் விழப்பெற்ற ஏந்திழை போலே
படுதுன்பம் அளவில்லை பதறித் துடித்தேன்
தீங்கைப் பொறுக்காது தீரமனம் கொண்டேன்
பாங்கான வேந்தனின் ஓங்குசபை யுற்றேன்
கண்ணுனை கணவர்க்கு நண்ணுதீங் குரைத்தேன்
மன்னவை வழக்காடி இழுக்கினை யொழித்தேன்
என்னுலே மன்னர்க்கும் நகருக்கும் இன்னல்
நன்னகர முற்றுமே நாசமுற் றதுவே
இக்கனவு எக்கேடு இழைக்குமோ அறியேன்
தக்கபடி இக்கனுப் பயனேது சாற்றுவாய்
எனக்கேட்ட கண்ணகிக்(கு) இனியமொழி சொல்வாள்
மனக்கினிய தோழி !யான் மதியொன்று சொல்வேன்
கண்டகன வாலே கலக்க மடையாதே
கொண்டகண வனுல்நீ கொள்ளுந்தகை யுள்ளாய்
சற்றும் வெறுக்கப் பட்டவள்நீ அல்லை
பெற்றமுற் பிறவியில் பேணுதவ நோன்பைத்
தவறினுய் ஆதலால் இத்தீங்கு சார்ந்தாய்
கவலையொழி தோழியான் கழறுமுறை கேட்பாய்
காவிரியின் சங்கமுகம் அதனிலே காணும்
பூவிரியும் இருகுளம் பொற்புடனே மாணும்

சோமநற் குண்டம் சூரியபொற் குண்டம்
தாமரைக் குளங்களிவை சார்ந்துநீ ராடி
கரையிலுள காமவேள் கோயிலதை நாடி
தரையிலே உடலாரத் தகவுற வணங்கப்
பிரிந்திட்ட கணவனும் பொருந்துவன் இணங்க
அருந்துயரம் ஒழியநாம் அடைகுவம் ஆங்கே
இருகுளம் நீராடிக் கருவேளைப் பணிவோம்
ஒருநாளில் என்னோடு உவப்புடன் வருவாய்
தேவந்தி நன்மொழியைச் செல்வியவள் கேட்டாள்
பாவமகள் தமிழ்நாட்டுப் பண்பொன்றும் அறியாள்
எனவெண்ணிப் புன்முறுவல் ஏந்திழையும் செய்தாள்
கனிவுடைய தோழியவள் கனிந்தமொழி கேட்ட
கண்ணகியாம் கற்பரசி சொன்னமொழி கேட்பீர்!

## இசை வேறு

அன்புநிறை தேவந்தியே!
அரியதமிழ் நாட்டியல்பை
இன்பமொடு கேட்டிடுவாய்
இனியவழி காட்டிடுவாய்
பயன்கருதித் தீர்த்தமாடார்
பழையதமிழ் நாட்டுமாதர்
நயனுடைய கணவரன்றி
நற்றெய்வம் கண்டறியார்
கொழுநனே தெய்வமென்று
கொண்டுவணங் கிடுவரம்மா!
பழுதாகும் உன்மொழிகள்
பைந்தமிழர் போற்றாரம்மா!

## வசனம்

கற்புடைய பெண்டிர்க்குக், கொண்ட கணவரே கண்கண்ட தெய்வமாவார்; அவரையன்றிப் பிறதெய்வங்களைப்

பேணி வணங்கமாட்டார்கள் தமிழ்நாட்டுப் பெண்கள் என்று கண்ணகி, தன் தோழிக்குக் கூறினாள்.

"தெய்வம் தொழாஅள் கொழுநன் தொழுதெழுவாள்
பெய்யெனப் பெய்யும் மழை"

என்று நம்முடைய தமிழ்வேதம் விதித்தது. இந்த வேத விதிக்குப் புறம்பாகவே தற்காலத் தமிழ் மாதர் நடந்து கொள்கிறார்கள் என்பது நாடறிந்த இரகசியம் ஐயா! மாலை வேளையை எதிர்நோக்கியிருக்கிறார்கள் மாதர்கள். வேலைமுடித்து விருப்போடு வெளியே புறப்பட்டுவிடு கிறார்கள். நேரே அந்த நேரிழை மாதர்கள் செல்வ தெங்கே? சொல்லவா வேண்டும்? கையில் காசில்லை யென்றாலும் கடன் வாங்கிக்கொண்டேனும் பேசும் படக் காட்சி-சினிமா-பார்ப்பதற்கு ஆர்ப்பரித்துக்கொண்டு செல் கின்றார்களே! என்ன செய்வது! இந்தப் படக்காட்சி களால் நாட்டுக்கு விளையும் கேட்டை நாவால் கூற முடியுமா? இந்தப் படக்காட்சிக்கு நுழைவுச் சீட்டுக் (டிக்கெட்டு) கிடைக்கவில்லை யென்றால் எங்கே நுழை கிறார்கள் இந்த மங்கையர்கள் தெரியுமா? கோவில்களில் நுழைகிறார்கள் ஐயா? ஊரில் எத்தனை கோவில்கள் உண்டோ, அத்தனையும் ஏறி இறங்கினாலொழிய வீட்டில் அவர்கட்கு நாட்டம் ஏற்படாது. இதற்குள் பொருள் தேடி உழைக்கச் சென்ற கணவன் இளைத்துக் களைத்து அலுத்து வீட்டையடைவான். பூட்டிய கதவைக் கண்டு உள்ளம் புழுங்கி, மெல்ல வெளியே செல்லுவான். இந்தக் காட்சிகளைத்தான் வீடுகளில் காணமுடிகிறது. நாட்டிற்கு நற்காலம் பிறக்கவேண்டும். நங்கையர்க்கு நல்லமனம் சிறக்கவேண்டும். இச் செய்தி ஒருபக்கம் இருக்கட்டும். இனிக் கண்ணகி கதைக்குச் செல்வோம்.

## பாட்டு

தோழியோடு கண்ணகி சொல்லாடும் வேளை
ஊழியப்பெண் ணொருத்தி ஓடோடி வந்தாள்
தாயனைய கண்ணகி! தலைவர் வருகின்றார்
தூயநம் கோவலத் துணைவர் வருகின்றார்
இங்ஙனம் பணிப்பெண் இயம்பியே நின்றாள்
மங்கைமொழி கேட்ட மாதரசி உள்ளம்
கொள்ளுவகை எல்லை கொள்ளுமோ சொல்லும்
தள்ளரிய காதல் தள்ளிட எழுந்தாள்
தேவந்தி விடைபெற்றுத் தன்மனை அடைந்தாள்
கோவலனை எதிர்கொள்ளக் கோதைவெளி வந்தாள்
ஏவல்புரி பாவையும் இன்பொடு தொடர்ந்தாள்
கோவலனும் நேரே குளிர்மனை யடைந்தான்
அண்ணலின் முகத்தில் அருங்கவலை கண்டாள்
கண்ணகி மலர்ச்சியொடு கடிதுவர வேற்றாள்
கள்ளமில் கண்ணகியின் உள்ளமது கண்டான்
வெள்ளமெனப் பாயுமவள் விருப்பத்தைக் கண்டான்
பள்ளியறை சென்றுபூம் பள்ளியில் அமர்ந்தான்
மெள்ளவே கண்ணகியும் மெல்லமளி சாய்ந்தாள்
இருவரும் சிறுநேரம் எதையுமே அறியார்
பிரிந்தவர்கள் கூடினால் பேசவும் வேண்டுமோ?
இன்பமது இழந்த ஏந்திழை கண்ணகியை
அன்புநிறை கண்ணால் ஆர்வமொடு பார்த்தான்
திருமகள் கண்ணகி உருமேனி வாட்டம்
பருவூசி பல்லா யிரம்பாய் தலைப்போல்
தன்னுளம் வாட்டப் புண்ணாய் உலைந்தான்
தன்னுடைய குற்றமது தானுணர்ந் திட்டான்
கற்பினுக் கணியே! பொற்புடைய மாதே!
அற்புடைய கண்ணகி! அறிவினை இழந்தேன்

மாதவி மயக்கால் மதியினை இழந்தேன்
பாதகம் பலபல பாவிசெய் திட்டேன்
ஊழ்வினை உருத்ததை ஓதிடவும் நாணம்
பாழ்போன செல்வமோ பருங்குன்று போலும்
இழிவான வழிசென்ற எனையேற்க லானாய்
பழியற்ற மாதுனைப் பதைத்திடச் செய்தேன்
செல்வக் களிப்பாலே சிந்தைதடு மாறினேன்
செல்வம் அழிந்தது தெளிவும் பிறந்தது
வறுமையின் பெருமையோ சிறுமையைத் தந்தது
ஒருபோதும் இனிமேல் உன்னையான் பிரியேன்

### வசனம்

என்று இவ்விதமாகக் கோவலன் கழிந்த செய்திகட்காக மனம்வருந்தி இரங்கிப் பலமொழிகளைக் கண்ணகிபால் சொன்னான். அது கேட்ட கண்ணகியோ, "நம் கணவர்க்கு, மாதவிக்குக் கொடுக்கப் பொருள் இல்லாமையால் இங்ஙனம் புலம்பி வருந்துகின்றார்போலும்; அதனால்தான் வறுமை வெட்கம் தருகின்றது என்கிறார்" என்று நினைத்தாள். அதற்காகக் கணவன்மேல் வெறுப்போ கோபமோ கொள்ளவில்லை. கணவன் கவலையை ஒழிக்க வழி தேடினாள். மார்பில் விளங்கும் மங்கலநாணைத் தவிர மற்றோர் அணிகலனைக் காணவில்லை. சற்று எண்ணமிட்டு நின்றாள். மற்றோர் அறையுள்ளே சென்றாள். அங்கிருந்த காற்சிலம்பு ஒன்றைக் கொண்டுவந்தாள்.

### பாட்டு

ஆருயிரென் நாயகரே!
அருங்கவலை கொள்ளவேண்டாம்
சீருடைய சிலம்பிரண்டு
செல்வமுறப் பெற்றுள்ளேன்

சிலம்புகள் கொண்டிடுவீர்
சிந்தைகளி கொண்டிடுவீர்
புலம்புதல் நீங்கிடுவீர்
புந்திமகிழ் வோங்கிடுவீர்
என்றுசொல்லிக் கண்ணகியாள்
இன்பமொழி கூறிட்டாள்
நன்றுரைத்த மங்கைமொழி
நன்னயத்தை எண்ணியிட்டாள்
கற்புக் கருங்கலமே!
கண்ணகியே பெண்ணணங்கே!
பொற்புடைய இச்சிலம்பைப்
பொருளாகக் கொண்டிடுவேன்
சிலம்புகளை விற்றிடுவேன்
செய்யபொருள் முதலேற்பேன்
நலம்புரியும் வாணிகத்தை
நாளைமுதல் செய்திடுவேன்
இந்நகரில் விலைகூற
என்றனுளம் நாணுமம்மா!
பொன்னகர மாமதுரை
போந்திவற்றை விற்றிடுவேன்
பொழுது புலர்வதற்குள்
புறப்பட வேண்டுமம்மா!
எழுவதற்கு வேண்டுவன
ஏற்றமொடு சேர்த்திடுவாய்
என்றுசொல்லிப் பள்ளிபுகுந்து
இறைப்பொழுது தூங்கியிட்டான்
நன்றுசொன்ன கோவலனின்
நன்மொழிகேட் டின்புற்றாள்

தானடைந்த துயரமெல்லாம்
        தகர்ந்து மறைந்ததென்றாள்
கோனடைந்த இன்பமொன்றே
        கோதற்ற செல்வமென்றாள்
இருட்போது நீங்குதற்குள்
        இருவரும் எழுந்துவிட்டார்
பொருள்தேட மாமதுரை
        புறப்படத் துணிந்துவிட்டார்
பூம்புகார் நகரமதைப்
        புறம்நீங்கி வழிநடந்தார்
தாம்புகும் வழியிடையே
        தக்கபொழில் ஒன்றுகண்டார்
நெடுந்தொலை நடந்தறியா
        நீள்கண்ணி மலரடிகள்
நடந்திடவே முடியாமல்
        நலிவுற்று மெலிந்தவையா !
தரைமகள் கண்டறியாள்
        தையலவள் மலரடிகள்
துரைமகன் கோவலனோ
        துயர்கண்டு துளங்கிநின்றான்
மாமதுரை எங்குளது
        மன்னதுரை சொல்லுமென்றாள்
தேமதுரத் தூமொழியால்
        ஆறைங்காவதமென்றான்

வசனம்

மதுரைமாநகரம் எவ்வளவு தூரத்தில் இருக்கிறது என்றுகேட்ட கண்ணகியின் உள்ளம் கலங்கிவிடாத வண்ணம், நயம்பட வுரைத்த கோவலன் நாவன்மையே வன்மை !

திறம்பெற்ற அறிவுற்ற கோவலன், ஐந்தாறு காவத தூரத்தில் உள்ளது என்று சொல்லினன். காவதம் என்பது பத்துக்கல் தூரம். ஐந்தாறு காவதம் என்பது முப்பது காவதமாகும். முப்பது காவதம் முந்நூறு கல்தொலைவு கொண்டதாகும். முந்நூறுகல் தூரத்தில் உள்ளது முத்தமிழ் மாமதுரை என்று சொல்லியிருந்தால் கண்ணகி என்னநிலை அடைந்திருப்பாள். கல்லைக் காவதமாக்கினன்; முப்பதை ஐந்தாறு என்று மாற்றினன். ஐந்தாறு காவத தூரத்திலுள்ளது என்று சொன்னன். இப்படிச் சொல்வது ஒரு சாமர்த்தியம்; கேட்பவர்க்கு அயர்ச்சி தோன்ருதிருக்க அரிய வழி. தற்காலத்திலும் வயது முதிர்ந்த பெரியவர்களிடம் வழியெல்லே கேட்டால், அந்த வழிநடை வருத்தம் தோன்ருவண்ணம், "இதோ! கூப்பிடு தூரத்தில் இருக்கிறது!" என்று சொல்வதைக் கேட்கலாம். தற்கால இளைஞர்களிடம் கேட்டாலோ அணுவையும் மலையாக்கி அதனையும் விலையாக்கி விடுவார்கள்.

## பாட்டு

அரும்பொழில் இருந்திட்ட அரிவையும் கோவலனும்
விரும்பியே வழிநடக்க மீண்டும் புறப்பட்டார்
இடைவழியில் அறப்பள்ளி இருக்கவதில் புக்கார்கள்
நடைவருத்தம் நீக்குதற்கே நன்கமரப் புக்கார்கள்
உள்ளிருந்த பெண்துறவி உயர்கவுந்தி கண்டார்கள்
தெள்ளுசமண் துறவியவள் தேர்ந்தபே ரறிவுடையாள்
அன்னவளை இருவர்களும் அடிவணங்கி நின்ருர்கள்
மன்னுதவக் கவுந்தியவள் வந்தவரை நோக்கியிட்டாள்
பெருஞ்செல்வ ராம்நீங்கள் பேரூரும் சீர்மனையும்
பிரிந்திங்கு வந்தமையேன்? பெருங்குடிக் கழகன்றே
தாயன்ன கவுந்தியவள் தானுரைத்த மொழிகேட்டார்

தூயவரே நுந்தமக்குச் சொல்லும்வகை ஒன்றறியோம்
முன்னோர்கள் தந்தபொருள் மூடமதி யால்இழந்தேன்
பொன்னெலாம் போனபின்னர்ப் புத்தறிவு தானடைந்தேன்
இழந்தபொருள தானீட்டஎழின் மதுரைநோக்கியிட்டோம்
என்றுசொல்லக் கேட்டதவக் கவுந்தியவள்நன்றென்றாள்
நின்றொளிரும் மாமதுரை நீண்டதூ ரத்திலன்றோ!
மடக்கொடி மாதிவளும் கடக்கவும் முடியுமோதான்!
நடக்கும்வழி முட்களும் கற்களும் நலியுமையா!
பாண்டியன் மதுரைநகர் ஈண்டிய அறிஞர்களின்
காண்டரும் அறவுரைகள் கேட்டிடும் விருப்புடையேன்
ஆதலின் உங்களுடன் அணிமதுரை உற்றிடுவேன்
காதலின் மாதிவட்குத் தீதில்துணை யாயிருப்பேன்
என்றுசொலி மூவருமே இயலும்வழி நடக்கலுற்றார்
அன்றுமுதல் நாள்தோறும் காதமொன்றுகடக்கலுற்றார்
காவிரி வளங்கொழிக்கும் காராளர் ஏர்செழிக்கும்
காமலர்கள் தேன்துளிக்கும் தாமரைக் குளங்களிக்கும்
பார்வளம் கண்டுகொண்டே சீரங்கம் தானடைந்தார்
சாரணர்கள் அங்குவந்தார் தாளிணை வணங்கிநின்றார்
படகினில் ஏறிவந்தார் பழகுகா விரிகடந்தார்
இடமகல் தென்கரையை அடைந்தொரு சோலைகண்டார்
அப்பொழில் இருக்கும்வேளை அரிவையொடு தூர்த்தனவன்
ஒப்புறவே அங்குவந்தான் உத்தமர் இவரைக்கண்டான்.

## வசனம்

காவிரியின் தென்கரை அடைந்த கோவலனும் கண்ணகியும் குளிர்தவப்பெண் காவுந்தியும் உறையூரின் புறத்துள்ள ஒருசோலையில் தங்கினார்கள். அங்குவந்த வம்பப்பரத்தையும் வறுமொழியாளனாகிய தூர்த்தனும் இளமைநலம் கமழும் இன்பக் காதலரைக்கண்டு, மதனும்

ரதியும்போன்ற இவர்கள் யாரென்று கவுந்தியடிகளிடம் கேட்டார்கள். 'இவர்கள் என்மக்கள்' என்றார் கவுந்தியடிகள். 'நன்று! நன்று! ஒருதாய் வயிற்றில் உதித்த மக்கள் கணவனும் மனைவியுமாய் வாழ்தல் காசினியில் உண்டோ?' என்று கேட்டார்கள். அது கேட்ட கவுந்தி கடுஞ்சினம் கொண்டு ''புகழ்ந்து போற்றும் புனிதமக்களை இகழ்ந்துரைத்த நீங்கள் நரிகளாக மாறி, உறையூர்க் காட்டில் ஊளையிட்டு உலைந்து அலைந்து ஒழிவீர்!'' என்று சபித்தார்.

## பாட்டு

காவுந்தியின் சாபம் கடுகவே பற்றியது
பாவியர் இருவோரும் பாழ்நரிகள் ஆனார்கள்
நரிகள் நிலைகண்ட நம்பியும் நங்கையும்
அரிய தவமகளைச் சாபவிடை அருள்கென்றார்
உற்ற நரிகளிவை ஓராண்டு கழிந்தபின்னர்
பெற்றிடுக முன்னுருவம் என்றருள் பேசியிட்டார்
மூவரும் உறையூரை முன்னியிராத் தங்கிட்டார்
போம்வழியில் ஐயை பொற்கோயில் கண்டிட்டார்
கோயிலின் உட்புகுந்து குந்தி இருந்திட்டார்
ஆயநல் வேளையதில் ஆடினாள் தேவராட்டி
சாலினி தெய்வமேறிச் சாலமொழி பலசொன்னாள்
நடுவே கண்ணகியாம் நங்கையைச் சுட்டியிட்டாள்
கொங்கச் செல்வியவள் குடமலை யாட்டியவள்
தென்றமிழ்ப் பாவையவள் செய்தவக் கொழுந்தவளே
என்றுபின் நிகழ்செய்தி இயம்பி மகிழ்ந்திட்டாள்
இவள்சொன்ன மொழியதனை எவரும் அறிந்திலரே
பாண்டியன் ஆட்சியது பாரறிந்த மாட்சியது
ஈண்டிரவு சென்றாலும் ஏதம்விளை யாதையோ
இவ்விதம் சொல்லியவர் இரவில் வழிநடந்தார்

அவ்வழியில் பார்ப்பனர் அகம்நிறை சேரியொன்று
பார்ப்பனச் சேரியின் பக்கம் ஒரு கோயில்
சார்ந்தவண் கண்ணகியும் தவமகளும் அமர்கென்றான்
காலைக் கடன்கழிக்கக் கடிதே அகன்றிட்டான்
சாலவும் சேய்மையுள்ள தடாகம் அடைந்திட்டான்
அங்கே மாதவியால் அனுப்பலுற்ற கௌசிகனும்
பொங்கும் உவகையுடன் புகுந்தவனைக் கண்டிட்டான்
அண்ணலே! என்செய்தாய்? அரியநின் பெற்றோர்கள்
மண்ணும் மணியிழந்த மாநாகம் போலுழந்தார்
உயிரை யிழந்திட்ட உடம்புபோல் சுற்றத்தார்
துயரப் பெருங்கடலில் தோய்ந்து மூழ்கியிட்டார்
பணியாளர் எல்லாம் பல்வேறு திசை சென்றார்
மணிமுடித் தசரதனின் மைந்தன் இராமனன்று
அருநகர் அயோத்தி அகன்ற ஒருநாளில்
வருந்திய அந்நகர மக்களைப் போலுற்றார்
துன்பக் கடல்வீழத் தோகை மாதவியாளும்
அன்பனைக் காணாது உணவும் அருந்தவில்லை
பசந்த மேனியளாய்ப் படுக்கையில் வீழ்ந்திட்டாள்
வசந்த மாலைசொல்லால் வாடி வருந்திட்டாள்
என்பால் இவ்வோலை தந்துனக் கீகவென்றாள்
கண்மணி யனையாற்குக் காட்டுக ஈதென்றாள்
பன்னாடும் தேடியுனைப் பார்க்க முடியாமல்
இந்நாளில் கண்டேன் இதுபெறுக எனவளித்தான்
ஓலை விரிக்குமுன்னே உற்றஇலச் சினைகண்டான்
கோல மாதவியாளின் கூந்தல் குறியதுவே
அடிகள் முன்னர்யான் அடிவீழ்ந்தேன் வாசகமாம்
வடியாக் கிளவியீது மனக்கொளல் வேண்டுமையா
என்றினைய வாசகங்கள் இருக்கவே வாசித்தான்
நன்றனைய வாசகங்கள் நயந்தீன்ற பெற்றோர்க்கும்

ஏற்ப இருத்தலினுல் ஈந்தான் மறுபடியும்
சேர்ப்பாய் இதனையென்றன் செல்வமிகு பெற்ருேர்க்கு
வந்தனைகள் சொல்லி வழங்கி நலமுரைப்பாய்
வந்த மறையோனே மாமதுரை யாமடைவோம்
பெற்ருேர் துயர்தீர்க்க விரைந்து பெயர்ந்திடுவாய்
உற்றநற் கோசிகனே! உறுவாய் புகார்நகரம்
இங்ஙனம் வழியனுப்பித் தங்கிய கோயிலுற்ருன்
மங்கையும் தவமகளும் தங்கிய இடமுற்ருன்
மீண்டும் அவருடனே வேண்டி வழிநடந்தான்
ஆண்டுச் சிலபாணர் அரியவழி கூறியிட்டார்
பகலில் நடைவருத்தம் அகல இருந்திட்டார்
தகவாய் இரா நடந்து தமிழ்மதுரை தான்கண்டார்
மதுரை நறுந்தென்றல் வந்துவீசக் கண்டார்
அதிரும் பெருமுழக்கம் அண்மையில் கேட்டிட்டார்
முன்னவன் திருக்கோயில் முக்கண்ணன் உறைகோயில்
பொன்னுன கோபுரங்கள் கண்ணில் தெரியக்கண்டார்
மன்னவன் பாண்டியனின் மாளிகைக் கொடிகண்டார்
மன்னுமலை போல்மலைகள் மலிந்து விளங்கக்கண்டார்
எழுந்த ஒலிகூடி எழுகடல் ஒலியைப்போல்
மிகுந்திடக் கண்டவர்கள் மேலும் நடக்கலுற்ருர்
தண்டமிழ்ச் சுவைகண்ட வையை தனையடைந்தார்
கொண்ட புணையேறிக் குறுகினுர் தென் கரையை
வலமாகப் போந்து மதிலின் புறமடைந்தார்
நலமாகக் கீழ்த்திசையில் இலகும் பள்ளிகண்டார்
உறுநாள் களைப்பாறி ஆங்கே உவகையுற்ருர்
மறுநாள் வைகறையில் மைந்துடைய கோவலனும்
நேர்ந்த துயரனைத்தும் சார்ந்துகவுந் திக்குரைத்தான்
ஆர்ந்த தமிழ்மதுரை அணிநலம் காணலுற்ருன்
சென்று வருமளவும் செல்வியைக் காத்தருளும்

என்று பணிந்துரைக்கக் காவுந்தி இயம்பிடுவார்
நளனும் இராமனும் நங்கையரைத் தாம்பிரிந்து
வளநகர் தாம்நீங்கி வருத்தம் மிகவடைந்தார்
அக்கதை கேட்டிலேயோ ? அவ்விதம்நீ இல்லையையா
தக்கவுன் காதலியோ தகவாய் உடன்வந்தாள்
வருந்தாது சென்று வருக ! நீ என்றுரைத்தார்
பெருந்தகை கோவலனும் பெயர்ந்துநகர் உட்புகுந்தான்
மாமதுரை வளமெல்லாம் மகிழ்வாகக் கண்டுவந்தான்
ஏமத் திருநகரின் இயல்பை அறிந்துவந்தான்
கண்டுவந்த காட்சிகளைக் கவுந்தியடி கட்குரைத்தான்
பண்டைய நட்பாளன் பார்ப்பன மாடலனைச்
சந்தித் துரையாடிச் சிந்தை மகிழ்ந்திட்டான்
அந்த வேளையிலே வந்தாளோர் ஆயர்மகள்
மாதரி என்னுமவள் மாதவள் நட்புடையாள்
கோதில் குணமுடையாள் கோவலர் வாழ்வுடையாள்
அன்னாள் அடைக்கலமாய்க் கண்ணகி யைச்சேர்க்க
ரண்ணி அழைத்திட்டார் பண்ணு தவமுடையார்
மாதரியே ! சோதரியே ! ஆதரவு செய்திடுவாய்
மாதிவள் கண்ணகியாள் மாபெரும் குலமுதித்தாள்
இந்நகர் வணிகமக்கள் இவர்நிலை அறியும்வரை
என்றன் அடைக்கலமாய் உதவினேன் கொள்கென்றார்
லத்தவர் இவள்தந்தை கொண்டபெயர் கேட்டிட்டால்
லத்திரு அடைந்தார்போல் நன்கு மகிழ்ந்திடுவார்
இவளுக்குத் தாயும் இனியதோ ழியும்நீயே
வமகள் அடைக்கலம் தக்கநற் பயனளிக்கும்
ன்னவே கண்ணகியின் கற்பை இயம்பியிட்டார்
பான்னேர் கற்புடையாள் புண்ணியத் தெய்வமிவள்
ற்புநிறை மாதர் வாழும் கவின்நாட்டில்
னமோ பொய்யாது வளமோ சுருங்காது

கோனவன் வெற்றி என்றுமே குன்ருது
இவ்விதம் சொல்லியிட மாதரி ஏதுரைப்பாள்
கொவ்வை இதழுடையாள் நவ்வியிள மானனையாள்
பெண்ணரசி யோடவளும் பேணும் மனையடைந்தாள்
அண்ணல்கோ வலனுடனே அருமனை இருத்தியிட்டாள்
தன்மகள் ஐயையினைத் தனித்தோழி யாய்அமைத்தாள்
பொன்மகள் கண்ணகியைப்போற்றிநீ ராட்டிவைத்தாள்
உணவுக்கு வேண்டுவன உதவிப் பேணியிட்டாள்
குணவதி கண்ணகியும் உணவு சமைத்திட்டாள்
இனிய சுவையுணவை ஆக்கி அமைத்திட்டார்
அரிய கணவன் அடிமலர் கழுவியிட்டாள்
குமரி இளவாழைக் குருத்தை விரித்திட்டாள்
அமுதுண்ண வந்தருள்க அடிகளே! என்றுரைத்தாள்
மலர்ந்த முகத்துடனே மாதரசி தான்படைத்தாள்
கலந்த உளமுடையான் கனிந்தமுது இனிதுண்டான்
விரும்பியமர் கோவலற்கு வெற்றிலைச் சுருள்தந்தாள்
அரும்பிய மூரல்கண்டு அளவிலா மகிழ்வுகொண்டான்
கண்ணே! கருமணியே கற்புடைய பொற்பாவாய்!
எண்ணரிய சீறடிகள் இனைந்து வருந்தினவே
உன்றன் நிலையெண்ணி உலைவரே பெற்ருேர்கள்
இன்றியாம் பெற்றதுயர் கனவோ நனவோதான்
முன்செய்த தீவினையும் மூண்டு விளைந்ததுவோ!
புண்செய்த என்றனுக்குப் புகுங்கதி உண்டாமோ!
இருமுது குரவர்க்கும் ஏவல் ஒழிந்திட்டேன்
திருமகள் நின்றனக்கும் தீங்குபல விழைத்தேன்

**வசனம்**

என்று உள்ளம் வருந்திக், கோவலன் கூறிய உண்மை வாசகங்களைக் கண்ணகி கேட்டாள். கணவனைப் பிரிந்து

வாழ்ந்த தனது அருந்துயர் நிறைந்த வாழ்வைக் கோவல னுக்கு மெமுற விளக்கிக் கூறினாள். இல்லறத்தை இனிது நடத்தமுடியாதிருந்த திறத்தை எடுத்து விளக்கினாள். அறவோர்க்கு அளித்தல், அந்தணரை ஓம்பல், துற வோர்க்கு எதிர்தல், விருந்தினரை ஏற்றல் ஆகிய நல்லறங் களைச் செய்யவியலாது சிந்தை நொந்திருந்த தன்னைக் கண்டு பெற்றோர் உற்ற பெருந்துயரைத் தெரிந்துரைத் தாள். "அப் பெற்றோர் வருந்தும்படியாக, நீர் பொருந்தா வொழுக்கத்தைப் பொருந்தினீர்; என்றாலும் உம் சொல் கடவாத யான், உடன்வருக என்றபோது உடன்பட்டு வந்தேன்," என்றுரைத்துப் புன்முறுவல் பூத்து நின்றாள். அவளை அன்போடு நோக்கினான் கோவலன்.

பாட்டு

நாணமும் மடனும் நல்லோர் ஏத்தும்
பேணிய கற்பும் பெருந்துணை யாக
என்னொடு போந்தீங்கு என் துயர் களைந்த
பொன்னே கொடியே புனைபூங் கோதாய்
நாணின் பாவாய் நீணில விளக்கே
கற்பின் கொழுந்தே பொற்பின் செல்வி
சிற்றடிச் சிலம்பைப் பெற்றியான் செல்வேன்
விற்றுநான் வருவேன் மெல்லியல் மயங்கேல்
என்றுகண் ணீர்மறைத்(து) இடமகன் றிட்டான்
அன்றெதிர் வந்தகொல் லேற்றையும் அறியான்
அணிநகர் ஆவண வீதியை அடைந்தான்
பணிபுரி தட்டார் பல்லோர் சூழ்ந்திட
மன்னவன் வரிசை வாங்கிய தட்டான்
பொன்னுடை புனைந்து போந்திடக் கண்டான்
அவனை நெருங்கி அணிதனைக் காட்டி

நவமணிச் சிலம்பிது அரசியர் நயப்பது
விலைமதிப் பிடற்கு வல்லையோ விளம்பென
புலைத்தொழில் உடைய பொற்கொல்லன் பார்த்தான்
சிலம்பின் அருமை சிறக்க நோக்கினன்
வலங்கொள் மன்னன் தேவி மகிழ்வது
உயர்ந்த சிலம்பிது அரசியர்க்(கு) உரியது
அயர்ச்சி நீங்கஇச் சிறுமனை அருகே
அமர்க என்றே அரண்மனை நோக்கினன்
தமரை யகன்று தனியே விரைந்தான்
முன்னர்அக் கொல்லன் மன்னவன் தேவி
பொன்னுறு சிலம்பைக் கவர்ந்த புலையன்
ஆதலின் இச்சிலம்பு அரசற்குக் காட்டி
வேதனைத் துன்பம் விலக்கிட நினைத்தான்
அரண்மனை புகுந்தான் அரசனைக் கண்டான்
அரசன் அந்தப்புரம் விரைய நோக்கினன்
தேவியின் ஊடல் தீர்க்க விரைந்தான்
பாவி பொற்கொல்லன் பார்த்தஅந் நேரம்
ஊழ்வினை உருத்துவந் தூட்டிடும் நேரம்
சூழ்ச்சி பயன்தரும் சொல்லிய நேரம்
அரசே! ஈதோ அடைந்ததச் சிலம்பு
உரைசெய் சிலம்புத் திருடனும் உள்ளான்
எளியேன் மனைப்புறம் உள்ளனன் இப்போ
அளியருள் புரிக! அடியேன் பணிந்தேன்

வசனம்

பொற்கொல்லன் சொற்கேட்ட புரவலனாகிய பாண்டியன், சேவகரைக் கூவியழைத்தான். அக் காவலர்களை நோக்கிச் சற்றும் ஆராய்ச்சியற்றவனாய், "அரசியின் சிலம்பு, இவன் கூறிய கள்வன் கையிடத்தே உள்ளதாயின்

அவனைக் கொன்று, அச் சிலம்பைக் கொண்டுவருக" என்று கட்டளையிட்டான். தனது எண்ணம் பலித்த தென்று தருக்கி மகிழ்ந்த பொற்கொல்லன், காவலாள ருடன் சென்றான். கோவலன் இருக்குமிடத்தை யடைந் தான்; "இவர்கள் அரசன் ஆணையால் சிலம்பைப் பார்க்க வந்தவர்கள்," என்று கூறிச் சிலம்பை அவர்கட்குக் காட்டி, அவர்களைத் தனியே அழைத்துச் சென்று, சிலம்பின் சிறப்பைக் குறிப்பவன் போன்று, அரசியின் சிலம்புதான் இது என்று நம்புமாறு கூறினான். "இவன் கள்வனைப் போல் காணப்படவில்லை; கொலைப்படுதற்கு உரியனல்லன் இவன்," என்று சொல்லிய காவலாளரை இகழ்ந்து உரைத்தான். "இவன் கள்வனே" என்று பல காரணங் காட்டி வற்புறுத்தினான். அப்போது கொலைமஞ்சாப் பாதகக் காவலன் ஒருவன்,

### பாட்டு

வாளாலே வீசிவிட்டான்
வந்துற்ற கோவலனை
மாளாத புகழுடையான்
மண்ணிலே சாய்ந்துவிட்டான்
பொன்னான பூதவுடல்
புழுதியில் புரண்டதையோ!
மன்னரும் போற்றுசீரான்
மண்ணிலே வீழ்ந்துவிட்டான்
தங்கமா மேனியெல்லாம்
தவிடுபொடி யாச்சுதையோ
பொங்கிய குருதிவெள்ளம்
பூமியை நனைத்ததையோ!

ஊழ்வினை சூழ்ந்ததையோ !
உயர்நீதி ஆழ்ந்ததையோ !
பாழ்வினை வந்ததாலே
பாதகம் நடந்ததையோ !
கண்டவர் கலங்கிநின்றார்
காரணம் தெரியநின்றார்
உண்டவர் செய்திகேட்டே
உண்ணாமல் எழுந்துவிட்டார்
ஆயர்தம் சேரிதன்னில்
அபசகுனம் பலவும்கண்டார்
நேயமிகு மாதரியாள்
நேரான சாந்திசெய்தாள்
திருமாலை வேண்டிநின்றார்
திகழ்குரவை யாடிநின்றார்
பரவியபெண் மாதரியாள்
படியவே வையைசென்றாள்
கோவலன் மாண்டசெய்தி
கோதையர்கள் ஓதக்கேட்டாள்
பாவையவள் கண்ணகியும்
பகர்செய்தி கேட்டறிந்தாள்
ஐயையோ ! கண்ணகியாள்
அடைந்ததுயர் யாருரைப்பார் !
வையத்தில் வீழ்ந்துருண்டாள்
வாய்விட்டுப் புலம்புகின்றாள்
ஆய்ச்சியர் சூழநின்றாள்
அரியமொழி கூறலுற்றாள்
காய்கதிர்ச் செல்வனே! என்
கணவனும் கள்வனுமோ ?

இந்தமொழி கேட்டகதிரோன்
இல்லையவன் கள்வனில்லை
வந்தவனைக் கள்வனென்ற
மாநகரைத் தீயழிக்கும்
சூரியன் சொன்னமொழிகள்
தோகையவள் கேட்டவுடன்
வீரியம் பொங்கவந்தாள்
விரைந்துகொலைக் களமடைந்தாள்
கண்டவர் நடுங்கிநின்ருர்
கண்ணகி கதறிவந்தாள்
கொண்டவன் கணவன்பேசக்
கொள்ளுவன் செவியிலென்ருள்
கற்புடைய மாதர்!கேளீர்
கற்புடையள் யானும் என்ருள்
பொற்புடைய கணவன்வார்த்தை
புகன்றிடக் கேட்பன்என்ருள்
வெட்டுண்ட களமடைந்தாள்
கோவலன் மேற்புரண்டாள்
கட்டழகன் மேனிதன்னைக்
கட்டியே தழுவியிட்டாள்
சாமியே என்னவீது
சார்ந்ததும் இதற்குத்தானே
பூமியிலே பொன்னுடலும்
புரண்டிடவோ இங்குவந்தோம்
கோவலன் உயிர்த்தெழுந்தான்
அன்புமொழி கூறலுற்ருன்
மாமதியைப் போன்றமுகம்
வாடியதே என்றுரைத்தான்

கண்ணீரை மாற்றியிட்டான்
　　கலங்காதே இருக்க! என்றான்
வண்ணமலர்ப் பாதம்பற்றி
　　வணங்கியே மங்கையழுதாள்
மீண்டுமவன் உயிர்நீங்கினான்
　　மெல்லியல் கதறுகின்றாள்
ஈண்டுபழி ஓட்டிடுவேன்
　　இனியபுகழ் நாட்டிடுவேன்
அரசனைக் கண்டவன்முன்
　　அரியவழக் காடிடுவேன்
பெருமகனைக் கள்வனென்ற
　　பேரூரை அழித்திடுவேன்
மன்னன்அரண் மனையடைந்தாள்
　　வாயிற்கா வலனைக்கண்டாள்
சொன்னஎன் செய்திதனைச்
　　சொல்லுக அரசற்கென்றாள்
அவ்வேளை அரசன்தேவி
　　தான்கண்ட அரியகனவைச்
செவ்வையாய் மன்னனுக்குச்
　　செப்பியே உடனிருந்தாள்
கண்ணகியின் கோலங்கண்ட
　　காவலன் ஓடிச்சென்றான்
மன்னவனே காளிபோலும்
　　மாதொருத்தி வாசலிலுள்ளாள்
காதலனை இழந்தவளாம்
　　கையிலொரு சிலம்புகொண்டாள்
ஓதவொரு செய்தியுண்டாம்
　　உம்மிடம் என்றுசொன்னான்

வாயிலோன் சொன்னமொழி
மன்னவனும் கேட்டுணர்ந்தான்
ஆயிழையை அழைத்துவர
அனுமதியும் தந்தோமென்றான்
கண்ணகியும் சபையடைந்தாள்
காவலனும் கேட்கலுற்றான்
கண்ணீர் சொரியவந்த
காரிகையே! நீயார்! என்றான்
தேவர்களும் வியக்குமாறு
சிறுபுறவின் துயரைப்போக்கப்
பாவியசீர்த் துலையிற்புக்க
பார்த்திபன் ஆண்டநாடு
ஆவொன்றின் துயரம்போக்க
அருந்தேரை மகன்மேல்விட்ட
காவலன் ஆண்டநாட்டில்
காவிரிப்பூம் பட்டினமாகும்
அந்நகரில் வணிகர்மரபில்
அவதரித்த கோவலனாவான்
துன்னியமுன் ஊழ்வினை தன்னால்
துரத்தப்பட் டிந்நகர்வந்தான்
சிலம்பொன்று விற்கவந்து
தீயகொலைத் தண்டனையுற்றான்
நலமிக்க கோவலன்மனைவி
நங்கைஎன் பெயர்கண்ணகியாம்
தேராத மன்னா! உன்னால்
தீராத பெரும்பழியுற்றேன்
சீரான என்றன்கணவன்
தீயபெருங் கள்வனானான்

கள்ளனையான் கொன்றொழித்தல்
கடுங்கோலோ? வேலின்கொற்றம்
தள்ளரிய துயரத்தாலே
தடுப்பரிய கோபங்கொண்டாய்

### வசனம்

"கள்வனைக் கொல்லுதல் கடுங்கோலன்று" என்று கூறிய காவலன்மொழியைக் கேட்ட கண்ணகி, கடுஞ் சீற்றம் கொண்டாள். "கோவலனிடமிருந்து நீர் பெற்ற சிலம்பு, என்னுடைய சிலம்பு; எனது சிலம்பின் பரல்கள் மாணிக்கங்கள்! உம் தேவியின் சிலம்பிலுள்ள பரல்கள் யாவையோ?" என்று கூறி நின்றாள். "அப்படியா! என் தேவி யின் சிலம்புப் பரல்கள் முத்துக்கள்" என்று கூறினன். சேவகனைக் கூவியழைத்தான். கோவலன்பால் பெற்ற சிலம்பைக் கொண்டுவருக என்று கட்டளையிட்டான். சேவகன் சிலம்பைக் கொணர்ந்தான். அதனைத் தன் கையில் வாங்கினாள் கண்ணகி. ஓங்கித் தரையில் எறிந்தாள். சிலம்புள்ளிருந்த மாணிக்கப் பரல்கள் நாலு பக்கமும் சிதறின. மன்னவன் திருமுகத்திலும் வந்து பாய்ந்தது ஒரு மாணிக்கம். மாணிக்கத்தைக் கண்ட மன்னன் நாணித் தலை கவிழ்ந்தான். "ஐயோ!" என்று அலறினன்.

### பாட்டு

வஞ்சகக் கொல்லன் வாய்மொழி கேட்டேன்
கொஞ்சமும் தேராது கொலைதனைச் செய்தேன்
மன்பதை காத்திடும் தென்புலம் காவல்
என்முதல் பிழைத்தது கெடுக! என் ஆயுள்
இங்ஙனம் கூறியே இறைமயங் கிட்டான்
தங்குசிங் காதனம் சாய்ந்திட வீழ்ந்தான்

கணவனை இழந்தால் காட்டுவ தில்லெனத்
துணிவுடைத் தேவி இணையடி தொழுதாள்
தன்னுயிர் கொண்டவன் மன்னுயிர் தேடினள்.

### வசனம்

உலகிலே தாய் தந்தை, மாமன் மாமி அண்ணன் தம்பி, தமக்கை தங்கை முதலானவர்களை இழந்தால் அம் முறையுடையார் பிறரைச் சொல்லிக் காட்டமுடியும். ஆனால் கணவனை இழந்த பெண்களுக்கு அம் முறை சொல் லிப் பிறரைக் காட்டமுடியாதல்லவா! ஆதலினாலே கோப் பெருந்தேவி, கணவனை இழந்தோர்க்குக் காட்டுவ தில் லென்று, பாண்டியன் பாதங்களைப் பற்றி வணங்கித் தானும் உயிரைவிட்டாள். இங்ஙனம் அரசனும் தேவியும் இறக்கக் கண்டும் சினந்தணியாத மனங்கொள் கண்ணகி வஞ்சினம் ஒன்று கூறினள்.

### பாட்டு

கற்புடைய பெண்டிர்கள் பற்பலர் பிறந்த
காவிரிப்பூம் பட்டினக் கடிநகர்ப் பிறந்தேன்
விற்பனர் உரைத்ததமிழ் வேதமது கூறும்
மேன்மையுறு கற்புடைய மெல்லியல்யான் என்றால்
வளமான மதுரைநகர் முழுதையும் அழிப்பேன்
வள்ளல்என் கணவன்பேர் அழியாமல் நிறுப்பேன்
உளமானம் ஒழியாது பழியைக் கெடுப்பேன்
உத்தமிஎன் சீரறிய உயருலகை அடுப்பேன்

### வசனம்

என்று சொல்லிக் கண்ணகி மதுரையை மும்முறை வல மாகச் சுற்றிவந்தாள். தன்னுடைய இடதுமார்பைத்

திருகி வானிலே சுழற்றி வீசி எறிந்தாள். அப்பொழுதே அந்நகரில் அணைக்கமுடியாத பெருநெருப்புப் பற்றி அழிக்கத் தொடங்கியது. நெருப்பின் வெம்மையைப் பொறுக்க முடியாத மதுரையின் அதிதேவதை, கண்ணகியின் முன்னர்த் தோன்றினாள்.

## பாட்டு

சீருடைய கண்ணகியே!
தென்மதுரைத் தெய்வமாவேன்
பேருடைய பாண்டிமன்னர்
பெயர்பெற்ற நீதிமன்னர்
அரியணையில் உயிர்துறந்த
அரசனும் நீதிதவறான்
உரியவுன் கணவன்மாய
உற்றகுறை சொல்லக்கேளாய்!
சிங்கபுரம் ஆண்டமன்னன்
சிறந்தவசு என்பவற்கும்
பொங்குபுகழ்க் கபிலபுரம்
புரந்தவன் குமரனுக்கும்
மிக்கபகை இருந்ததம்மா
வெல்லவும் முயன்றாரம்மா
தக்கவுயர் சிங்கபுரம்
சார்ந்தகடை வீதிதன்னில்
சங்கமன் என்னும் வணிகன்
தங்குபொருள் விற்றிருந்தான்
அங்கவனைக் கண்டபரதன்
அயலவன் ஒற்றனென்றான்
அரசனிடம் காட்டிநின்றான்
அரியகொலை செய்துவிட்டான்

மரித்தஅச் சங்கமனின்
 மனைவியும் நீலிஎன்பாள்
ஆறெட்டு நாட்களாக
 அலைந்துபெருந் துயரமுற்றாள்
ஏறிமலை மேலேநின்றாள்
 எரிசாபம் கூறிவீழ்ந்தாள்
எந்தமக்கு இத்துயரம்
 இழைத்தவர்கள் மறுபிறப்பில்
இந்தவகைத் துயரடைவார்
 என்றுசொல்லி வீழ்ந்திறந்தாள்
பரதனே கோவலனாய்ப்
 பாரினிலே வந்துதித்தான்
சரதமாய் வந்ததுன்பம்
 சார்ந்தீர்கள் இப்போதம்மா!
பதினான்கு நாட்கழித்துன்
 பதியினைக் காண்பாயம்மா!
மதுரையின் அதிதேவதை
 வாய்மையே உரைத்தேனம்மா!

## வசனம்

இவ்விதமாக மதுரையின் அதிதேவதை, மாண்புற்ற கண்ணகியின் முன்னே தோன்றிக், கோவலனின் பழம் பிறப்பு வரலாற்றை விளங்குமாறு கூறியது. அவளது மனத்துயரை மாற்றித் தேற்றியது. பின்பு, கண்ணகி மதுரையைவிட்டு நீங்கினாள். பாங்கான வையையின் பரந்த கரைவழியே மேற்குநோக்கி விரைந்து நடந்தாள். சேரநாடாகிய சிறந்த மலையாளநாட்டை அடைந்தாள். அங்குள்ள நெடுவேள் குன்றமாகிய திருச்செங்கோட்டு மலைமேல் ஏறினாள். ஆங்குள்ள வேங்கைமரம் ஒன்றின்

பாங்கான நிழலிலே நின்ருள். அவளைக் கண்ட மலைவாழ் வேடர்கள்,

பாட்டு

ஒருமார்பு இழந்த திருமா பத்தினியே
பெருமைகொள் நின்னுடைய பெற்றியைக் கூறிடுவாய்
இங்ஙனம் கேட்ட இயல்வேடர் தங்கட்கு
மங்கையாம் கண்ணகி மறுமொழி கூறியிட்டாள்
மணமிக்க மதுரையும் மன்னவன் பாண்டியனும்
கணப்பொழுதில் அழியக் கடுஞ்சினம் கொண்டிட்டேன்
பழவினை வந்திங்கு பற்றிய காரணத்தால்
கொழுநனை இழந்தேன் கொடுவினை யாட்டியேன்
என்றுமறு மொழிகூறி நின்றிட்ட வேளையினில்
துன்றுபுகழ் வானவர்கள் தோன்றி மலர்சொரிந்தார்
கோவலனைக் காட்டிக் கூடவழைத் துச்சென்ருர்
மேவிய காட்சியிதை வேடுவர் கண்டார்கள்
பெண்ணிவள் நம்குலத்துப் பெருந்தெய்வ மாகிடுவாள்
நண்ணி இவள்பொருட்டு நற்குரவை யாடிடுவோம்
என்று குரவைக்கூத்து இன்பமாய் ஆடினூர்கள்
நன்றுபல வாத்தியங்கள் நின்று முழக்கினூர்கள்
குரவையுள் குமரவேளைக் குறித்துப் பாடினூர்கள்
திரமுடைய வேலதனைச் சிறப்பித்துப் பாடினூர்கள்
வேடுவர் தாம்கண்ட தேடரிய காட்சியினை
நாடுபுகழ் மன்னன் நற்சேரன் அறிந்திடவே
செங்குட் டுவனென சேரன் தெரிந்திடவே
தங்கும் மலைப்பொருளைத் தாங்கிப் புறப்பட்டார்
மலைவளம் காணுதற்கு மன்னனும் வந்திருந்தான்
அலைமிகு பேராற்றின் கரையில் அமர்ந்திருந்தான்
சேரன் திருமுன்பு சேர்ந்திட்ட வேடுவர்கள்

ஏழ்பிறப் படியோம் வாழ்க! நின்கொற்றமென்ருர்
வாழ்மலையிற் கண்ட காட்சி வகுத்துரைத்தார்
அப்பொழு தங்கிருந்த வணிகர் அரும்புலவர்
செப்பரும் சீத்தலைச் சாத்தனுர் தமிழ்ப்புலவர்
கண்ணகி வரலாற்றைப் பண்ணுற மொழிந்திட்டார்
மன்னவன் பாண்டியனின் துன்னிய கொடுங்கோன்மை
உன்றனக் குரைப்பாள்போல் உற்றனள் இந்நாட்டை
நன்றுநின் கொற்றம் ஞானம் சிறப்பதாக!

வசனம்

மதுரைக் கூலவாணிகன் சீத்தலைச் சாத்தனுராகிய செந்தமிழ்ப் புலவர், மதுரையில் தாம் இருந்தபோது நடந்த கண்ணகி பற்றிய செய்திகளையெல்லாம் கண்ணுரக் கண்டவர். ஆதலாலே கண்ணுரக் கண்டும் காதாரக் கேட்டும் அறிந்த செய்திகளையெல்லாம் சேரமன்னனுக்குத் தீரத்தெளியக் கூறி முடித்தார். அதுகேட்ட சேரன் செங் குட்டுவன் பெருத்த வருத்தமுற்ருன்.

பாட்டு

எம்மைப்போல் அரசர்களின்
ஏற்றமுறு செவிகளிலே
செம்மையின் வழுவியசொல்
சேர்வதற்கு முன்னலே
தன்னுயிரை நீக்கிவிட்டான்
தகவார்ந்த பாண்டியனும்
முன்னைவினை. செங்கோலை
முன்னியே வளைத்ததையா
வினைவளைத்த செங்கோலை
வேந்தனுயிர் நிமிர்த்ததையா
இனையபெரும் அரசாட்சி
இன்பமன்று துன்பமையா

## வசனம்

இங்ஙனம் பாண்டியனைப் பாராட்டிய சேரன், பக்க மிருந்த தன் பட்டத்தரசியை நோக்கினன். "வேண்மாள்! கணவனுடன் உயிர்நீர்த்த கற்பரசி-பாண்டியன் தேவி, சினத்துடன் நம் சேரநாடு நோக்கி வந்த சீரிய கற்பரசி கண்ணகி, இவ்விரு பெரும் பத்தினியருள்ளே, பேணத் தக்க பெருமையுற்றவர் யார்?" என்று கேட்டான். அது கேட்ட அரசி, "காதலன் துன்பத்தைக் காணாது உயிர் நீத்த கற்பரசி - பாண்டியன் பெருந்தேவி விண்ணுலகில் சிறப்புப் பெறுவாள்; ஆனால் நம் நாட்டை நோக்கி நடந்துவந்த நங்கையர் திலகம்-மங்கையர்க்கரசி - மாபெரும் பத்தினி-கண்ணகியாம் பெண்ணணங்கைப் பேணி வழிபட வேண்டும்," என்று பதில் சொன்னாள். 'அவ்விதமே செய்வோம்!' என்று, அரசன் அமைச்சரை நோக்கினன். 'கண்ணகியின் உருவம் அமைத்தற்குரிய அரிய கல்லை, இமயத்தில் எடுத்துக் கங்கையில் நீராட்டிக் கொண்டு வருவோம்" என்றுரைத்து நின்றார்கள் அமைச்சர்கள். அங்ஙனமே இமயத்தில் கல்லெடுத்து, இன்னீர்க்கங்கையில் பொங்கு புனலாட்டி, மங்கல மடந்தைக்கு—மாபெரும் பத்தினிக்கு - கற்பரசி கண்ணகிக்குப் பொற்புடைய வடிவம் சமைத்தார்கள். வஞ்சிமா நகரில் வளமான கோயில் அமைத்தார்கள். அந்தத் திருக்கோயிலில் செந்தமிழ்க் கற்புத் தெய்வத்தை அமைத்தார்கள். பன்னாட்டு மன்னர் களும் படைகள் புடைசூழ் வந்து வணங்கி வழிபட்டார்கள்.

## பாட்டு

பத்தினிக் கண்ணகியின் பரசும் திருக்கதையை
வித்தகர் இளங்கோவும் மெத்த அறிந்திட்டார்
புத்தம் புதியகதை பூவுலகு நிகழ்ந்தகதை

இத்தரை வாழ்பவர்கள் இனிது தெரியவேண்டும்
ஆதலின் காதலுடன் அரியதமிழ் நூலிசைப்பேன்
பூதலம் உள்ளவரை புகழும்நூல் தானிசைப்பேன்
உரைசால் பத்தினியை உயர்ந்தோர் ஏத்திடுவர்
அரசியல் பிழைத்தோர்க்கு அறமே கூற்றமாகும்
ஊழ்வினை உருத்துவந்து உறுபயனை யூட்டிவிடும்
ஆழ்ந்தஇம் மூன்றுண்மை அறிந்திடக் காட்டுவேன்
சிலம்பே காரணமாய்ச் சிறந்த திருக்கதையைச்
சிலப்பதி காரமென்றே செந்தமிழில் ஆக்கிடுவேன்
இங்ஙனம் கூறியவர் இனியதமிழ் நூல்தந்தார்
அங்கவர் தந்தநூலே அரியசிலப் பதிகாரம்
சிலப்பதி காரமது செந்தமிழ்க்கு மணியாரம்
உலப்பிலா னந்தமையா ! உயர்ந்ததெள் ளமுதமையா !
வாழியவே! தமிழ்நாடு, வாழியவே! புலவரெல்லாம்
வாழியவே! இளங்கோவும், வாழியே! அவர்நூலும்
வாழியவே! கண்ணகிபேர், வாழியவே! கற்புடையோர்
வாழியவே! இக்கதையைக் கேட்டவர்கள் வாழியவே!
கற்பரசி நற்கதையைக் கற்றவர்கள் வாழியவே!
பொற்புடைய கண்ணகியைப் போற்றியவர் வாழியவே!
விற்பனர் இளங்கோவை விரும்பியவர் வாழியவே!
அற்புதச் சரிதமிதை ஆய்ந்தவர்கள் வாழியவே!

